


அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : Om.

ஸத்யமேஜெயம்—Satyameva Jayati.

புத்தகம் 12.] 1903-ம் வருஷ ஜூலைமீ [இலக்கம் 3.

SPEAK THE TRUTH AND PURIFY THE HEART.

"Do the truth you know and you will learn the truth you need to know"—Geo. Macdonald.

# "வாய்மையாலகந் தூய்மையாம்"

"சத்யம்வத"—வேதவாக்.

"சேய்மையண்மையி லுயிர்க்கொருதுணை யெனச்சிறந்த
வாய்மையா லகந் தூய்மையா மற்றிலை புறத்தைத்
தூய்மைசெய்வது நீரலாற்சொல்லின் வேறுளதோ
நோய்மை செய்யினும் வாய்மையே நோன்பெமக்கறிதி."

**ஸத்யவிரதம்** எல்லாவற்றிலும் பெரியநோன்பு. ஸ்திரீகளுக்குப் **பதிவிரதம்** எப்படியோ அப்படிப் புருஷர்களுக்கு ஸத்யவிரதம் எல்லா நன்மையையும் பயக்கும்.

"தெய்வந்தொழாஅள் கொழுநனைத்தொழு தெழுவாள்
பெய்யெனப் பெய்யுமழை"

யென்று செப்பிய திருவள்ளுவ நாயனாரே

"பொய்யாமை பொய்யாமை யாற்றினறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று" என்றார்.

பொய் சொல்லாமையையே விரதமாகக்கொண்டு சதாநடக்கச் சக்தியிருக்குமானால் வேறுதருமங்களெதுவுஞ் செய்யாமையே நல்லது. ஏனெனில், மனம் பொருந்த உண்மை

சொல்பவன் தவத்துடனே தான தர்மங்கள் செய்பவரினும் மேலாவன் என்பது நிதரிசனமாவது பற்றி அப்படிச்சொன்னர்.

"மனத்தொடுவாய்மை மொழியில் தவத்தொடு
தானஞ்செய்வாரிற்றலை."

இகபரசுகமிரண்டு மெளிதில் அடைவதற்கு சத்திய விரதத்தைப்போல் அதி சுளுவான வழி வேறில்லை. ஆனல் இந்த விரதமிருந் தனுஷ்டிப்பது மகாகஷ்டம். இது ஊருக்கு ஒப்புக்குப் பொய் சொல்லாமையன்று. அல்லது சுயநயம் பாராட்டி வியாபார நாணயம்பற்றிப் பொய் சொல்லாது வாக்குப் பரிபாலனம் செய்வதுமன்று. இவையெல்லாம் கொடுக்கல் வாங்கல் வியாபார நாணயமாம். காசுபண மதிப்பின்மேல் காரியார்த்தம் பொய்சொல்லாமலிருப்பது சத்தியவிரதமாகாது. இக்காலத்திலுள்ள சத்தியமெல்லாம் இப்படிப்பட்டதாகவே யிருக்கிறது. சத்தியவிரதத்தின் தத்துவமென்னவெனில் கறந்தபால் கறந்தபடி யுண்மையுரைப்பதேயாம். கறந்தபால் கறந்தபடி யுண்மை பேசுவதென்றால் உண்மையைச்சொல்கிறேனென்று எல்லார் மனதையும் நோக வைப்பதல்ல. மனநோவ மெய்யுரைப்பான் உண்மை யுரைப்பினும் அது சத்தியவிரத அனுஷ்டானமாகாது. மனம்நோவ மெய்யுரைக்கின் விரதபங்கம்வரும். இதைவற்புறுத்தவே திருவள்ளுவநாயனர் எடுத்ததும்,

"வாய்மையெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமையிலாத சொலல்"

என்று சொன்னர். பிறிதோருயிருக்குச் சிறிதேனும் தீமையைத்தராத சொல்லே வாய்மையெனப்படுமென்றார். சத்தியம் அழிவற்றது. அதை நாம் ஒப்புக்கொண்டாலும் ஒப்புக்கொள்ளாவிட்டாலும் அது மாறுவதில்லை. ஆனல் வாய்மைபேசல் வியவகார தசையில் அனுஷ்டிக்கத்தக்கது. உண்மையைச்சொல்ல உள்ளபடி யிருவர்வேண்டும். சொல்கிறவ னுண்டான விடத்துக் கேட்கிறவனொருவ னிருக்கவேண்டு மென்பது தானே யமையும். சொல்கிறவன் கேட்கிறவன் என்றேற்பட்டபொழுது, சொல்கிறவன் கேட்கிறவனுக்கு வருத்தமுண்டாகாதபடிச் சொல்லவேண்டிய தவசியம். கேட்கிறவனுக்கு வருத்தமுண்டுபண்ணினல் அவன் மனம் வருத்தத்தி லீடுபட்டுக் கேட்கும் சக்தியற்றதாய் விடுகிறது. அப்பொழுது முதல்வன் பேசுமுண்மை கேட்பவன் மனதிலேறுமற் போய்விடுகிறது. அப்பொழுது முதல்வன் உண்மைபேசியும் பேசாதவனேயாகிருன். எப்பொழுது இவன் பேச்சு ஏறவில்லையோ அப்பொழுது அது பிரயோஜனமற்றதாகப்போகிறது. போகவே சத்தியவிரதம் தவறிப்போகிறது. நோன்பு தவருதிருக்க, கேட்பவன் மனநோகாதபடி உண்மையை ஹிதோபதேசமாகச்சொல்லல்வேண்டும். அப்படிச் சொல்லாதுபோனல் அது உண்மை பேசியதாகாது. ஆனல் பிறர் மனம் நோவாமலிருக்கப் பொய் சொல்லலாமோ வெனின், அதுவும் கூடாது. மனதறிந்து பொய்சொன்னல் தன் மனதே தன்னைச்சுடும்.

"தன்னெஞ்சறிவது பொய்யற்க, பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச்சுடும்."

மெய்யைப் பேசவும் வேண்டும். பிறர்மனம்நோவப் பேசுதலும்கூடாது. மனதறியப் பொய்சொல்லலும் ஆகாது. இந்த நோன்பில் எவ்வளவு கஷ்டமிருக்கிறது பாருங்கள். அகத்

தூய்மையின்றி ஆராயின் எல்லாம் அசாத்தியமாகவே படும். நோன்பெடுத்து அனுஷ்டித்து வந்தால் எல்லாக்கஷ்டங்களும் சிறுகச்சிறுகப் பறந்துபோம். தன்னுள்ளஞ் சாக்ஷியாக வுண்மை பேசுகிறவன் உலகத்தா ரெல்லாராலும் கொண்டாடப்படுவான். ஏனெனில் அவன் சத்யவிரதத்தின் அருமை நோக்கி அவனையே உயர்ந்தோரெல்லாரும் மேலாகக்கொண்டாடுவார்கள். எல்லாருள்ளத்திலும் அவன் வாசஞ் செய்பவனுவன். அரிச்சந்திரனைக் கொண்டாடாதார் யார்? அவனைப்போல், சத்யவிரதன் உலகுய்ய அவதாரமான சத்புருஷனுகக்கொண்டாடப் படுவான்.

"உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தார்
உள்ளத்து ளெல்லா முளன்"

சத்யவிரத மனுஷ்டிப்பவன் கஷ்டங்களை யெல்லாம்வென்று நோன்பு தப்பாமல் நடந்து வருவானுனல் அவன் மனத்திலுள்ள அழுக்காறு நீங்கி உள்ளம் பிரகாசிக்கும். இதை அருட்பிரகாசமென்பர் மதநூல் பற்றிப்பேசுவோர். எப்படி யுரைக்கினுமென்? உள்ளொளி விளங்க விளங்க உண்மையை மேலு மேலு முணர்ந்து சன்மார்க்க வழியில் அவன் முன்னிட்டுச் செல்பவனுவன். இப்படிப்பட்டவர் சான்றோராகி, சாயுஜ்ய சாம்ப்ராஜ்ய பதவிக் கருகராவர். இகபர சுக மிரண்டிற்கும் இது காரணமானதுபற்றி இந்த சத்திய விரதத்தை இளமைப் பருவமுதற் கொண்டே குழந்தைக ளனுஷ்டித்துவரப் பழக்கவேண்டும். இதற்கு வாக்குமாத்திரத்தில் உபதேசித்தால் போதாது. பெரியவர்கள், அதாவது பெற்றோர்களும் உபாத்தியாயர்களும் மற்றப்படி குழந்தைகள் நடத்தைக்குக் காரணபூதராகவிருக்கும் பெரியவர்களும் சத்தியந் தவறாது நடந்துகாட்டல் வேண்டும்.

"எல்லாவிளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யாவிளக்கே விளக்கு."

என்றதனால் இந்த சத்தியவிரத அனுஷ்டானத்தால், அதாவது பொய் சொல்லாமையா லுண்டாகும் விளக்கே ஆத்மா உத்ஜீவித்துய்ய வழிகாட்டும் பேரொளி விளக்காயிருப்பதால் இந்தவெளிச்சம் குழந்தைகளுக்கு பாலப்பிராய முதலமைய அவர்களை வெகு ஜாக்கிரதையாக மெய்வழிப்பட்டு நடக்கப் பழக்கல்வேண்டும். உலகத்தில் உடலைவளர்ப்பதற் கவசியமான சீவனுர்த்தகாலக்ஷேபமுதல் மோக்ஷசாம்பிராஜ்யம் வரையில் எல்லா இஷ்டசித்திகளையும் கொடுப்பது இந்த **வாய்மை** யொன்றே யாதலால் இதை நம்மவர் நித்யவிரதமாக அனுஷ்டித்துவரல் வேண்டும். தானம், தவம், மதம் முதலான மன்னுயிர்க் கின்றியமையாத ஆசாரானுஷ்டான விரதங்களெல்லாவற்றிலும் புருஷார்த்த நான்கையும் பயக்கும் பெருமை வாய்ந்த சத்யவிரதமாம் இந்த வாய்மையின் மிக்கது வேறொன்றில்லையால் இதையே யெல்லாரும் அனுஷ்டித்து வரல் வேண்டும்.

"யாமெய்யாகக் கண்டவற்று ளில்லையெனைத்தொன்றும்
வாய்மையி னல்லபிற"

என்றார் பிறவி ஞானியாகிய திருவள்ளுவரும். ஆகையால் நம்மில் எல்லவரும் இந்த ஸத்ய விரதத்தைக் கைவிடாது அனுஷ்டித்து வரல்வேண்டும். **"வாய்மையா லகந்தூய்மையாம்."**

அகந்தூயின் அருளுதயமாம். அருளுதயமாக ஞானசித்தி கைகூடும். ஞானசித்தி கைகூட எல்லா சம்பத்தும், இகபரசுகமும் கிடைக்கும்.

ஓம் தத் ஸத்.

ஸத்யானந்தஃ

---

## Worship of the Wife Ideal.

## சுமங்கலிப் பிரார்த்தனை.

"பெண்ணிற் பெருந்தக்கயாவுள கற்பென்னும்
திண்மை யுண்டாகப் பெறின்"—திருக்குறள்.

கற்பென்னும் கலங்கா நிலைமை யுண்டாயிருக்கப் பெற்றால் ஒருவன் பெறுதற்குரிய பொருள்களுள் மனையாளிலும் உயர்வான பொருள் வேறில்லையென்றார் பெரியோர். இது உலகானுபவத்தில் யாருமறிந்த உண்மை. "மங்கல மென்ப மனைமாட்சி:" மனையாளது நற்குண நற்செய்கைகளே **மங்கலம்**—நன்மையென்று சொல்லப்படுவதாம். இந்த மங்கலத்துக்கு நன்மக்கட்பேறு ஆபரணமாமென்று சொல்லியுள்ளார். ஆகவே **சுமங்கலி** யென்னும் பேர் அம்மிமிதித்து அருந்ததிபார்த்துப் பதிவிரதாதருமம் பூண்டபெண், அவ்வருமை விருதத்துக்குப் பங்கம் வராது நடந்து வருவாளாயின் அவளுக்கே யுரித்தாம். மனோவாக்குக் காயங்களாகிய திரிகரண சுத்தியோடும் பதிவிரதாபங்கம் வராது கத்தி முனையில் நடப்பவள்போல் நல்லொழுக்கம் பற்றி நடக்கும் உத்தம ஸ்திரீகளாம் இல்லறக் கிழத்திகளே அருந்ததிமரபி லவதரித்த **சுமங்கலி**களாவர். பதிவிரதமாவது புருஷனையே கண்கண்ட தெய்வமாகக் கொண்டாடியுபாசித்து உத்தமவழியிற் பழகி உய்யும் வழிதேடுதலாம். நம்முன்னோராகிய இருஷிகள் இதை அவ்வளவு உத்தமோத்தமமான வழியாகச் சிறப்பித்துக் கூறுவானேனெனில், இந்தப் பதிவிரதா தர்மத்தால், பத்னி அன்பு பெருக ஆர்வநிறைந்து ஆருயிர்க் காதலனை அன்போடு பணிந்து அவன் எக்குற்றமுள்ளவனாயினும் தன் அன்பு நிறைந்த கண்ணால் அவனைப்பார்க்கும்பொழுது அவன் குற்றங்களையெல்லாம் குணங்களாகமாற்றி, குறைகளை யெல்லாம் நிறைவெய்தச் செய்து, பரிசவேதி தான் தொட்டதையெல்லாம் பொன்னாகச் செய்யுமாபோல், உள்ளன்பு நிறைந்த உண்மையளாமிவள் பூர்ண அன்பினால் அவன் குற்றங்களையெல்லாம் குணங்களாக மாற்றி அவனைப்பூஜித்துத் தான் கடைத்தேறுவதன்றி தன்னுடைய பூஜாவிசேஷத்தாலும், பதிவிரதமகிமையினாலும் அவனையும் கடைத்தேறச்செய்யும் சக்திவாய்ந்தவளாகிறாள். இவ்வளவு சக்தியுமவளுக்குண்டாவது எதனாலென்றால் அவளுடைய **பூரண அன்பின்** மகிமையால். **பூரண அன்பின் சக்திக்கு அளவில்லை.** அன்பின் மகிமையை அளவிட்டுச்சொல்ல முடியாது. "அன்பொன்றுண்டானா லார்தான் பிழைக்கமாட்டார் !" என்று சொன்னது ஒப்புக்குச் சொன்ன வார்த்தையல்ல. உண்மையில் உள்ளபடி ஸ்வானுபவத்தில் கண்டதை வெளியிட்டதன்றிவேறில்லை. ஆகையால் பதிவிரதாதருமம் ஏற்படுத்தினது ஸ்திரீகள் இல்லறத்திலிருந்து இகபரசுகமெய்தி மோக்ஷ சாம்ராஜ்ய மடைவதற்காக அதிசூக்ஷ்மமாக அமைந்த சுலபவழி

சாதனமுறைபவசியம்பற்றியென்று அறியவேண்டியது. இக்காலத்தில் இங்கிலீஷ் படிப்புப் படித்தவர்கள் ஸ்திரீ புருஷர் சமத்வத்வம் பொருந்தப்பெறவேண்டுமென்று முன்னோர் ஏற்படுத்திய உத்தம வழிகளைப் பழித்து பாதகம் செய்கிறார்கள். முன்னோர் கருத்தறிந்து நடக்காது கண் மூடித்தனமாய் நடக்கும் மாமூல்வழக்கத்தால் கெடுதலேயன்றி நன்மை சிறிதும் விளைவதில்லை யென்பது திண்ணம். ஆனால் அதைச்சீர்திருத்த முயலுவோர் தற்காலத்தில் நடக்கும் அக்கிரம வழக்கங்களைப் பழித்து நீக்காமல், முக்காலத்துப் பெரியோர்கள் சத்யநிலையறிந்து தீர்க்கதரிசனவிசேஷத்தோடு ஏற்படுத்திய சம்பூரண சாக்ஷாத்கார சாதனமுறைகளாம். உத்தம எண்ணங்களை புண்மையறியாமல் உதாசினமாகப்பேசி அவைகளை மண்ணில் போட்டிழுத்து உண்மையாளர் மனமறுகச்செய்வது தேசக்ஷேமத்திற்காவது ஜனக்ஷேமத்திற்காவது உண்மைக்காவது ஒத்ததாகவில்லை. இப்படிப்பட்ட உத்தமக்கொள்கைகளை யனுசரித்து வாழ்ந்து வானுலகம் சென்ற புண்யவதிகள் தேவலோகத்தில் பெருஞ்சிறப்புப்பெற்றுயர்ந்து வாழ்வார்களென்பது தீர்க்கதரிசிகள் சாக்ஷாத்காரமாய்க் கண்டவுண்மை.

"பெற்றாற் பெறிற் பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழுமுலகு."—திருக்குறள்.

தம் கணவர்களைத் தெய்வமாக வணங்கும் பெண்களைத் தேவர்கள் தொழுவார் என்று திருவள்ளுவர் உண்மையை உள்ளபடி செப்பியுள்ளார்.—இப்படிப்பட்ட உத்தமிகள் தேகம் விட்டுத்தேகிகளானால் அவர்கள் தேவர்களும் வணங்கும் தேவதாம்சமாவதுபற்றி இல்லறத்தார் அவரவர் குலத்தில் உண்மையாகவிருந்த உத்தமஸ்திரீகளாம் சுமங்கலிகளை விசேஷகாலங்களிலும், வருஷத் திதிக்குப் பின்னிட்டும் தெய்வமாகக்கொண்டாடிப் பூஜித்துப் பிரார்த்தனை செய்யவேண்டுமென்று ஏற்படுத்தியுள்ளார்.—இது நாளது வரையிலும் எல்லாக்குடும்பங்களிலும் வழங்கி வருகிறது. இப்படிப் பதிவிரதா சிரோமணிகளாயிருந்து மாங்கல்யத்தோடு மாக்ஷி பெற்றுயர்ந்த மஹாத்மாக்களைப் பூஜித்துப் பிரார்த்தித்தலுக்கே **சுமங்கலிப் பிரார்த்தனை** யென்று பேர். 'எப்போதும் நன்மையே செய்யும் தேவதாம்சமானவர்களைப் பூஜித்துப் பிரார்த்திக்கொள்ளல் தகுமென்பது இதன் உட்கருத்தாம். மேற்றிசையார் நம் ஆர்யானுஷ்டானங்களை யிகழ்ந்து பேசுவது வழக்கமாக விருக்கிறது. நம்மவர்கள், உயர்நிலை தவறி உத்தமவழிதப்பி, இருளும் மருளும் நிறைந்து, உண்மை வழிதப்பி உய்யும் வழியறியாது அல்லாடி வருவதால் அவர்கள் நம்மவரைப் பார்த்து இப்படி கையரண்டி செய்து பழித்துப் பேச நேரிடுகிறது.—இதற்கு அவர்கள் பேரில் குற்றஞ் சொல்லக் காரணமில்லை. நம்மவர்கள் மடைமையே காரணமாயிருக்க அவர்களை வீணில் நொந்து கொள்வதில் பயனென்ன? மேற்றிசையில் உண்மை வழிபற்றி உய்ய விரும்புகிறவர்கள் அங்கு வழங்கும் உத்தம எண்ணங்கள் அவர்கள் ஆத்ம தாபத்தைத் தணிக்கத்தக்க பெருமை பொருந்தியதில்லாமை கண்டு, கீழ்த்திசை நோக்கி வந்து சத்தியத்தை நாடி சாத்விகமேற்பூண்டுழைத்து வருகிறார்கள். அவர்கள் பூர்வத்தில் ஏற்பட்ட ஆர்ய உண்மைகளின் மேன்மையையும் அதை அனுபவத்தில் கண்டுய்ய நம்முளேற்பட்டுள்ள உண்மையான உயர்வாழ்வையுங் கண்டும் கேட்டும் ஆனந்தித்து அந்த நிலையடைய உண்மையிலுழைத்து வருகிறார்கள். நம்மவர்களில் இங்கிலீஷ் படிப்புப்படித்து

சந்தியாவந்தனத்தையும் கைவிட்டு சாஸ்திர உண்மையை அனுசரித்து நடப்பதாகச் சொல்லி போம்வழி வரும்வழி தெரியாமல் "குருடனும் குருடனும் குருட்டாட்டமாடிக்குழியில் விழுந்த" கதையாக மேற்றிசையார் பின்பற்றிச் செல்வதே பெருமையாக மதிக்கும் புன்மதிகள் இந்த மேற்றிசைச் சற்சிஷரைத் தமக்கு சத்குருவாகக்கொண்டு பணிந்து அவர்கள் இழுத்தவழிகளிலெல்லாம் போயலைந்து புனிதமான ஜன்மத்தைப் பாழாக்குகிறார்கள். இதுவுமவர் விதிவசமேயன்றி வேறல்ல. இவ்வசைமொழிகளை நாமே பகர்ந்தோமென்று எவரும் நம்மீது பகைபாராட்டத் தேவையில்லை. அவர்கள் கொண்டாடும் குருகுலதிலகர்கள் உள்ளத்தில் உள்ளபடி உண்மையாக நினைக்குமெண்ணத்தை நாம் நம்மவர்கள் நன்மையைக் கருதி வெளியிட்டதன்றி வேறல்ல. பகைத்தும் திகைத்தும் பிரயோசனமில்லை. போனதைப் போகவிட்டு, இனி வீண்காலம் போக்காது உள்ளதை யுணர்ந்து உண்மை வழிநடக்க இதைப் பார்த்தவுடன் சங்கற்பித்துக் கொண்டு முன்வைத்தகால் பின் வாங்காது முயலுவதே ஆண்மைக் கடையாளமாம். உண்மைக்கும் அது அனுகூலமாம். ஆகையால் பதிவிரதாதர்மம் இப்பரதகண்டத்தில் வளர்ந்துவர யாவரும் முயலவேண்டும். சுமங்கலிகளைப் போல சுபம்விளைப்போர் யாருமில்லை. ஆகையால் இப்பரதகண்டத்தில் மட்டுமன்றி, கீழ்லோகம் மேல்லோகமிரண்டிலும் பதிவிரதா தர்மம் பூண்டொழுகும் பத்னிகளுக்கும் அவர்களைக் கொண்டாடும் சிஷ்யவர்க்கங்களுக்கும் நித்ய மங்கலம் கூறி இதை முடிப்போம். ஜகத்திலவதரித்த சுமங்கலிகளுக் கெல்லாம் மங்கலம். பாரிலவதரித்த பதிவிரதைகளுக்கெல்லாம் மங்கலம். பூவிலவதரித்த புண்யவதிகளுக் கெல்லாம் மங்கலம். ஊரிலவதரித்த் உத்தமிகளுக் கெல்லாம் மங்கலம். நாட்டிலவதரித்த நன்மக்களுக் கெல்லாம் மங்கலம். என்னிருதயத் திருந்தாளு மின்னுயிர் நாயகிக்கு மங்கலம்: ஜயமங்கலம்.

விண்ணிலொளியே விழுமியதேனே
மண்ணின்மதிபோல் மனைக்கோர்விளக்காய்
எண்ணிலொளியாய் ஹ்ருதயத்தன்பாய்
கண்ணிற்பாவைபோல் கணவற்கிசைந்த பாவாய்போற்றி.

"அன்பும் சிவமுமிரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாருமறிகிலார்
அன்பே சிவமாவ தாருமறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருப்பாரே."—திருமந்திரம்.

சுபமஸ்து. ஓம்.

சுமங்கிலிவிரதன்.

# The Gospel of the Holy Mother.

## As presented by Her to Her Blessed Child and Son.

*On the Day of the Cleansing at the Spirit. 00.*
*(With the First Dawn of the 20th Century)*

# ஆனந்தத்தாய்மொழி.

### 7-வது: காதலிற்கலவி—கண்டணைப் படலம்.

அந்தரங்கமான ஆனந்தத்தாயவளுக்
கன்போடொர்ருரகசியம் அனுப்பவுந்தான்விரும்புகிறேன் :—

நீ காட்டுவதுசுலபவழி இருத்துவது கஷ்டநிலை;
மற்றோர்காட்டும் வழி கஷ்டமதே யானாலும்
அவர் இருத்தும்நிலை மிகவுந்தான் இலகுவான தென்தாயே.
தாயே தயாபரமே தஞ்சமென்று அடைந்தேனை
சாட்டிவிட்டபம்பரம்போல் ஆட்டிவிட்டே பார்த்திருந்தாய்:
ஆட்டிவிட்டபம்பரமும் அசைவோய்ந்து நின்றபின்பு
சூக்ஷ்மமாய் எடுத்தாய் நீ சூன்யத்தைக் கட்டைவிட்டு*
சூன்யத்தை யெடுத்து நீ சூக்ஷ்மமாய் வைத்துக்கொண்டு
ஆகாயக் கூண்டதனில் அடைத்துவிட்டாய் நீயதனை;
சூன்யமடைத்த கூண்டு சூக்ஷ்மமாயெழுந்ததுகாண்:
வேகுவேகென்று உயர்ந்ததம்மா அக்கூண்டு;
உச்சத்தில் உயர்வற்று சுற்றியே நின்றதம்மா !†
"சுற்றின சுற்றதுதான் சுழன்றுநேர் எழுந்ததனால்"
என்றுசொல்லி நீயுமென் கைப்பிடித்து மத்திழுத்தாய்!
கைபிடித்து மத்திழுத்துச் சூக்ஷ்மத்தைக் காட்டிவிட்டாய்:
மத்திழுத்த மயக்கத்தில் மர்மத்தைநானறியவில்லை;
அறியவில்லையானாலும் அறிந்திடுவே னென்றுணர்ந்து,
கைபிடித்து நீயுமே மெதுவாய்த்தான் சுற்றுவித்தாய்.
"சுற்றிச் சுழன்றலுத்தாய் சூக்ஷ்மத்தை யுணர்ந்தி" டென்று
கைபிடித்தென்னை நீ கட்டிலிலே யுட்கார வைத்தாய்
அலுத்தேன் நான் படுப்பேனென்றேன்; அது கூடாதென்றாய் நீ:

* The Spirit alone-become or Seperated from sense and thought perceptions in which it was enmeshed
† Refers to the *turya* state.

"உட்கார்ந்திரு" வென்று உள்ங்கனிந்து நீ சொல்ல;
சொன்னபடியிருந்தேன் நிஷ்டையது கண்டது காண்;
நிஷ்டையது காணவும் துரியமும் வந்ததம்மா:
துரியம் வந்தவேளையிலே துணிந்து நானாராய்ந்தேன்:
சூக்ஷ்மத்தை புணர்ந்து கொண்டேன் சூன்யவழி கண்டுகொண்டேன்:
சூன்யவழி செங்குத்தா யேறினதொரு காரணத்தால்,
செங்குத்து நேராய்ச் செல்ல சுழற்சிமிக வேண்டியதால்,
சுழன்று மிகநேராய்ச் சூன்யவழி யேறினதால்,
வந்தது கனமயக்கமென்று கண்டு கொண்டேனைப்போ:
கண்டு கொண்டேன் கண்டபடியிருந்ததுகாண் அனுபவத்தில்;
துரிதமாக மேலேறித் துரியாதீத நிலையடைந்தேன்:
அந்நிலையறிந்த காலையிலே நேர்ந்ததொரு அதிசயங்கேள்:—

வெள்ளிக்கிழமையது கீழ்வெளுக்கும் நேரமது
வெள்ளிவெளுக்கையிலே மூடினகண் விழிக்கையிலே
விழித்தகண் விழித்திருந்தேன் உன் மகிமையைக் கண்டதிசயித்தேன்.
அதிசயித்து அழுதேனம்மா உன்கழுத்தைக் கட்டிக்கொண்டு;
கட்டிக்கொண்டு அழுகையிலே கண்டேனம்மா அதிசயத்தை;
வெட்டவெளியைக் கண்டேன்: கட்டுவிட்டுக் கரைந்தழுதேன்:
கரைந்தழுத கண்களுந்தான் வெட்டவெளிகண்டதம்மா!
[58]அரஹர அரஹர அரஹர அரஹர
சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ
அரஹர சிவசிவ, அரஹர சிவசிவ
அரஹர சிவசிவ, சிவசிவ அரஹர
சிவசிவ அரஹர, அரஹர சிவசிவ
ஹரா, ஹரா! ஹரா, ஹரா! ஹரா, ஹரா!
ஹரஹராவென்றும், சிவசிவாவென்றும்
பன்முறை சொல்லிப் பனுவினேனம்மா!
ஆனந்தம் நிறைந்தழுதேன் ஆட்டங் கூத்து ஆடவில்லை:
அங்கஜேஷ்டைசெய்துநான் ஆடவில்லையானாலும்
உள்ளேயது குதித்ததம்மா, உள்ளன்பு ஆடித்தம்மா!
அது ஆடிக்கூத்தாடினதை அறியாயோ நீதானும்?
கூத்தாடிக்குதித்ததம்மா, குதித்துக்குதித்து ஆடினபின்,
ஆடியமர்ந்ததம்மா, அங்கங்குளிர்ந்ததம்மா,

58. c. f. "அரஹரவென்ன வரியதொன்றில்லை, அரஹரவென்ன வறிகிலர்மாந்தர்,
அரஹரவென்ன வமரருமாவர், அரஹரவென்ன வறும்பிறப்பன்றே."—திருமந்திரம்.

மூளையுந்தான் குளிர்ந்ததம்மா மண்டைவலிதீர்ந்ததம்மா!
மண்டைவலி தீர்ந்ததென்று மலங்கழித்து நீராடி,
சிவனைத்தரிசித்ததால் சிவவேடம் பூண்டேனம்மா!
விபூதி நீரிட்டேன் விமலசரீரியானேன்?
பரிபக்குவகாலமது கிட்டிவிடுமென்றெண்ணி
குருவைப் பணிந்துநான் குருதக்ஷிணைசமர்ப்பித்தேன்.
குருதக்ஷிணைசமர்ப்பிக்கக் கொடுக்கவேண்டும் சொந்தப்பொருள்:
எனக்கொன்றுமில்லாமல் எனைப்பரதேசியாக்கிவிட்டாய்!
ஆக்கிவிட்டாயானாலும் அறிந்தேன்நான் ஒரு சூக்ஷமம்
தேவடியாளென்றுநான் தேடியலைந்ததுபோக
குருவென்று உபதேசம் நான் குணமாகக்கேட்டிடுங்கால்,
மனமென்னும் மானொன்றை நான் வேட்டையாடிச் சுட்டுவந்தேன்;
வேட்டையாடிச் சுட்டுவிட்டே புத்தியுடன் வந்தேன்நான்:
குருபாதம் சேருமுன்னே குருவுபதேசிக்கும் முன்
குருவுதவியின்றியே நான் சுட்டுவிட்ட மானதனை
தோலுரித்துவைத்திருந்தேன் வெகுநாளாயிதற்காக:
"காலமது கிட்டியது கலக்கும் காலமும் கிட்டியது"
கிட்டியது கிட்டியதென்று கடவாத்தியம் முழங்கியது!
முழங்கியவாத்யத்தை நான் முழிவிழித்துக் கேட்டிருந்தேன்;
முழக்கம் முழங்குதையா: முடிவுநேரம்வந்ததையா!
வந்ததையா தாமதித்தால் வகைமோசம் வந்துவிடும்!

## குருதரிசனம்.

வந்து விடுமென்று சொல்லி வழிநடந்தேன் கடுகவேநான்,
குருபாதம் தேடிச் சென்றேன் குருவிருந்த இடமடைந்தேன்,
இடமடைந்து குருவைக்கண்டேன்—
அவர் வெட்டவெளியாய் விளங்கக்கண்டேன்;
வெட்டவெளி யொழிய வேறொன்றையுமங்குகாணேன்!

## குருபாதம்.

கண்டேன் குருபாதம் கண்டவரைப் பணிந்திட்டேன்.
பணிந்துமேயவருக்கு ஓர் ஆசனமுமிட்டேன் நான்;
அமர்ந்திருந்தார் அவரதில்காண் வெட்டவெளியதுவாய்;
வெட்டவெளியதுவாய் அமர்ந்திருந்த அவரைக்கண்டு,
அன்புருகநான் தொழுதேன்—

## திருவடிசரணம்

தொழுதுநின்றேன் அழுதிருந்தேன், அவர் பாதமதே சரணமென்று;
சரணம், சரணமென்று சரணம் செய்தேன் அவர்பாதத்தில்;
குஞ்சித பாதமென்பார் குணங்கள் பல சொல்லிடுவார்:
வெட்டவெளியாய் நின்றஅவர்க்குப் பாதமில்லை சிரசுமில்லை,
கண்ணுமில்லை காதுமில்லை பொன்றுமில்லை யவர்க்கே காண்;
ஒன்றுமில்லையானாலும் எங்குமவர் நிறைந்தவர்காண்;
எங்கும் நிறைந்தவர்காண்—
ஏற்றத்தாழ்ச்சி யற்றவர்காண்;
காதின்றிக் கேட்பாரவர்—
கண்ணின்றிப் பார்ப்பாரவர்;
காலின்றி உதைப்பாரவர்—
ஒன்றுமின்றி எல்லாம் செய்வார்!

## திருவடி நாட்டல்.

உதைபட்ட சரணையினால் அவர்பாதம் தொழுதேன் நான்:
நான்காணும்பாதத்தை நவின்றெழுதமாட்டுவேனே!
உதைபட்ட உணர்ச்சியினா லறிந்து கொண்டேனவர்பாதம்:
அப்பாதமதையறியவேண்டின் உதைபடணுமதனாலே;
உதைபட்டால் தெரியவரும் உளவறிவாயிருந்தவர்க்கு;

## திருவடி மகிமை.

அறிவறிந்த பெரியோர்கள் அதைமுடிவணங்கித் தொழுதிடுவர்;
பெத்தப்பெரியவர்கள் பெருநிதியம் பெற்றவர்கள்
அன்பாலே தூக்கியவர் சென்னிதனில் வைத்துத்தொழும்,
வைத்துத்தொழும் சீர்பாதம் வணங்கப்பெற்றேன் நானம்மா.

## தாள் தந்தாளல்.

வணங்கினனடியனென்று ஆட்கொண்டாரென்னையவர்,
ஆட்கொண்ட அன்பரவர் அரியோபதேசம் செய்தார்.

## மோன முத்திரை.

உபதேசம் செய்தேதான் உச்சத்தில் வருகையிலே
மௌனமது சாதித்து மறைந்துவிட்டார் அவரே காண்.
மறைந்துவிட்டார் அவர் தானும் மௌனம் தான் சாதித்தென்று
அழுதுவிட்டேன் என்புருகி அன்பவர்மேல் வைத்தவன் நான்.
அன்புருகியழுதத்னால் அவர் அன்புநிறைந்தருள்சுரந்து

சூக்ஷ்மமாய்த் தெரிவித்தார் அவர் சாதித்த மௌனக் குறிப்பதனை;
மௌனக்குறிப்பதனை வாய்விட்டுச் சொல்வாரோ!
எழுதத்தான் முடியுமோ ஏட்டிலுந்தானடங்குமோ!
குறிப்பாலேயல்லவோ குறியறிந்து கொள்ளவேணும்!
"**மௌனதரு**" வென்றுரைப்பார் மறைவழிப் பெரியோர்கள்;
அப்பேர்ப்பட்ட அவர் அபூர்வ இரகசியத்தை
யார்தானுரைத்திடுவார், அறிவதும்தான் எளிதோசொல்!

## 8-வது: தோத்திரம்—அவள் பேரன்புப் புகழ்.

பத்திமையும் பரிசுமிலாப் பசுபாசம் அறுத்தருளிப்
'பித்தனிவன்' எனஎன்னை ஆக்குவித்துப் போமே
சித்தமெனுந்திண் கயிற்றுற் றிருப்பாதங் கட்டுவித்த
வித்தகனுர் விளையாடல் விளங்குதில்லை கண்டேனே"—திருவாசகம்.

அன்பேயருளே இன்பே கனியே இன்னமுதேயுன்
கண்ணிற்பிறந்த கண்மணிகளெத்தனைபேர்
உள்ளங்கனிந்தாரை யுள்ளபடி போற்றுவாயே
உளங்கனிந்தேதான்வீழ்ந்தால் உவகையுடனேந்திடுவாய்
மண்ணில்வீழ்ந்ததானல் மாயைவந்துதொத்துமென்று,
மார்பிலே தாங்கியம்மா மடியில்வைத்து வளர்ப்பாயே!
நீ ஆகாச கங்கையென்று நின்னையள்ளிக் குடிக்கவெண்ணி
அடுத்தடுத்து வருவாரம்மா அனந்தனந்தம் பேர்களுமே,
நீகைக்கெட்டாக் கங்கையல்லோ வாய்க்கெட்டாவிண்ணமுதே!

உள்ளதுணர்ந்து உளவறிந் துனைக்கண்டு
ஹிருதயமாம்கலசமதை யழுக்கறவேதான்விளக்கி
அன்பாங்கைநீட்டி யாதரவாயுனையேந்தி
ஆருமறியாத அம்பரத்தே தனியிருந்து
தன்னைத்தானறியத் தபித்தவர்கள் தான்குடிப்பார்!
தபித்துக் குடித்தார்க்குத் தாகமது அற்றுப்போம்:
உண்டுகளித்தார் உளம்பெருகிப் பூரிப்பார்.
இத்தனையும் சொல்லி எத்தனையோ எண்ணினேன்நான்:
எத்தனைதான் சொன்னலு மேற்குமம்மா உன்றனுக்கு!

**9-வது: அநுபவானந்தம்—* அணைந்துழிப்புணர்ச்சியுளொடுங்கல்.**

"செம்மைநலமறியாத சிதடரொடுந் திரிவேனை
மும்மைமல மறுவித்து முதலாயமுதல்வன்தான்
நம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை யேற்றுவித்த
அம்மை யெனக்கருளியவா றார்பெருவார் அச்சோவே!"—திருவாசகம்.

அன்னைதனைக்கண்டேன் அருள்பெற்றேன் மயல்தீர்ந்தேன்
அருள்கூடத்தரிசித்தேன் அம்பலத்தாடும் அழகன்திருப்பாதம்
அன்புநிறைந்தென்புருக அவளையறிந்தேத்தினேன் தொழுதேன்.
59 அதிசயமா யவள்செய்த அற்புதலீலைகளை யுள்ளுற்றுணர்ந்தேன்;
அற்பனேயானாலும் அருள்பெற்றபாக்கியத்தால்
அலைகடல்தாண்டியே ஆனந்தித்தாடினேன் அருள்பாடினேன்;
அலர்ந்தேன் அமர்ந்தேன் அடைந்தேன் குருபாதம்;
அல்லலறுத்தாட்கொண்ட அம்பிகையைப் புல்லிப்புணர்ந்தேன்—
60 புலனற்றுப்பொறியிழந்தேன் பொன்னம்பலத்துட்போனேன் போனேனே.

ஸத்யமேஜெயம். ஓம் தத்ஸத். ஓம்.

**அம்பரம் வாழ்க, ஆனந்தம் வாழ்க.**

ஸ்ரீ அகண்டானந்த ஸத்குருவேநம:

"அபிவாதயே ஸாத்விக ரஜோ தம: த்ரிகுணாதீத ப்ரவராந்வித - அவதூதகோத்ர: ஆபத்பாந்தவஸூத்ர:
சதுர்வேத ஸத்புருஷ: ஸத்யாநந்த: சாந்த சர்மாநாமாஹமஸ்மிபோ."

சுபமஸ்து.

ஓம்.

---

* c. f. "முத்தியென்னப்படும்மங்கையைச்சோமுயல்பவருஞ்
சத்தியென்னப்படுமீசனருளன்றிச்சார்தலுண்டோ."

59. அதிசயமாயவள்செய்த .... உள்ளுற்றுணர்ந்தேன் c. f.

"உற்றுநின்றொருமெத்தகுசோதியைச்
சித்தர்களென்றுந்தெரிந்தறிவாரில்லை
பத்திமையாலேபணிந்தடியார்தொழ
முத்திகொடுத்தவர்முன்புநின்றனே."

60. புலனற்றுப்பொறியிழந்தேன்பொன்னம்பலத்துட்போனேன்போனேனே. c. f.

"புணர்ச்சியுளாயிழைமேலன்புபோல
வுணர்ச்சியுளாங்கேயொடுங்கவல்லார்க்குக்
குணர்ச்சியில்லாதுகுலாவியுலாவி
யணைத்தணைத்தின்பமதுவிதுவாமே"—திருமூலர்
திருமந்திரம்.

# THE ILIAD OF HOMER.

## ஹோமர் என்னும் மகாகவிபாடிய

# இலியயுத்தம்.

## முதற்காண்டம்.

(152-வது பக்கத் தொடர்ச்சி.)

### அகமம்னனுக்கும் அக்கிலனுக்கும் பிணக்கம்.

வேறு,

21. இன்னணம் யவனர்சேனை யிறத்தல்கண் டிறங்கியூனோ
என்னும்வா னிறைவி யக்கிலிகல் வலி வீரற்கன்று
தன்னுளக்குறிப்புத் தோன்ற வுணர்த்தலுந் தமரைக்கூவி
அன்னவனவர்களோடு மாய்ந்திடன் மேயினானால்.

(இ-ள்.) இவ்வாறு யவன சேனைகள் இறந்ததுகண்டு வருத்தமுற்று யூனோ என்னும் தேவராணி அக்கிலனையடுத்துத் தன் உளக்கருத்தை அவனுக்குத் தெரிவித்தபோது அவனும் கிரேக்கத்தலைவர்களை அழைத்து அவர்களோடும் ஆலோசிக்கலாயினான்.

22. வரன்முறை வழாதுமன்னர் வந்தவண் வதிந்தபின்னர்
முரண்மலி தடந்தோளக்கின் மொய்ம்புடை வீரனாண்டு
பெருந்தகை மன்னர்மன்னன் றன்முகம் பெட்பினோக்கி
உரந்தரு மொழிகளின்ன வுணர்வுற வுரைத்தா னன்றே.

(இ-ள்.) தலைவர்கள் எல்லாரும் அவரவர் வரவேண்டிய முறைமைப்படி வந்து சேர்ந்து அவரவர்க்குரிய தானங்களில் இருந்தபின்பு வலிமைமிக்க தடந்தோள்களையுடைய மகாபராக்கிரம சாலியாகிய அவ்வகிலன் சபையோர் முன்னெழுந்து நின்று அங்கு இராஜாதி ராஜனாய் வீற்றிருக்கும் அகமம்னனை நோக்கிப் பின் வருமாறு கூறலாயினான்.

23. நோயினா னமர்கள்யாரு நலிந்துயிர் நுடங்கயாமித்
தீயவெந்நிலத்தைத் தீர்ந்து சென்றிடா திருத்தல் யாதோ
மேயவெம் முனையின்வாளால் வீந்தவ ரொழியமுற்றும்
மாயுமுன் மீண்டுநந்த நாட்டினை மருவனன்றே.

(இ-ள்.) வேந்தனே, நமது சேனைகள் யாவும் கொடிய நோயினால் எண்ணில்லாமல் மாண்டு போகவும் நாமிந்தக் கொடிய பிரதேசத்தை விட்டுப்போகாமல் இன்னமும் இங்குத்தானே இருத்தலின் காரணம் தெரிந்ததில்லை. போர்க்களத்தில் பகைவர் படைகளால் மாய்ந்தவர்போக எஞ்சி நிற்பவரும் இந்நோயால் மடிந்து போகுமுன், போதும் போர்செய்தது, நமது தேசத்துக்கு மீளவும் திரும்பிச் செல்லுதலே நன்மையாகும்.

24. பரிதி வெங்கடவுளின்ன பான்மையின் வெஃகுளயாதோ
வருமொரு நிமித்தமிந்த மருமமிங் குணர்ந்துதேற்ற
ஒருவருமிலரோவன்றி யுறுபிணி தவிர்க்குமாறு
தெரிபவர் தாமுமீங்கு தேர்ந்திடி னில்லராமோ.

(இ-ள்.) இக்கொடிய வெப்புநோயால் கதிர்க்கடவுள் நமது சேனைகளை யிவ்வாறு அழிக்கும்படி அக்கடவுளுக்குக் கோபமூலக்காரணம் யாதோ? இவ்வுண்மையை அறிந்து சொல்லவல்லவர் ஒருவரும் இல்லையோ? இதற்கு நிவிர்த்தியேனும் இன்னதென்று தெரிந்துரைக்க வல்லவரும் நம்முள் ஒருவரு மில்லையோ!

25. வேண்டுறு முறையாலேற்றைப் பலியிடாவிதத்தால் வெய்யோன்
மூண்டெழு முனிவுகூர்ந்து நமைத்தெற முன்னலாலே
ஈண்டிது விளைந்ததாமே லின்னையே முனிவுதீரக்
காண்டகு பூசையாற்றிப் பலியிடக் கடவே மின்றே.

(இ-ள்.) செய்யத்தக்க விதிப்படியே அக்கதிர்க் கடவுளுக்குக் காளைக் கன்றுகளைப் பலியிடாமையினாலே அக்கடவுள் கோபங்கொண்டு நம்மவர்களைக் கொல்ல நினைந்ததனாலே இந்நோய் உண்டானதாமென்னில், இப்போதே அவன் கோபந்தீர்ந்து சந்துஷ்டி யடையும்படி உரியபூசைகளைச் செய்து பலிகளும் இடக்கடவோம் என்றான்.

26. இன்னணமெழுந்துகூறி யிருந்தபின் காற்க னென்னும்
துன்னருமறிவு முள்ளத் தூய்மையுஞ் செறிந்ததோன்றல்
மன்னிய யவனர்க்கெல்லாங் குரவனாய் வதிந்தோன் செவ்வே
உன்னிய மூன்றுகாலத் துணர்வுளா னெழுந்து சொல்வான்.

(இ-ள்.) இவ்வாறு அக்கிலன் எழுந்துநின்று கூறி முடித்தபின் காற்கன் (Chalcas) என்னும் பெயருடையவனும், அடைதற்கரிய ஞானமும், மனத்தூய்மையும் பெற்றவனும், கிரேக்கர்கள் எல்லாருக்கும் குருஸ்தானத்தைப் பெற்றவனும் திரிகால ஞானியுமான பெருமையையுடைய ஒருவன் எழுந்து சொல்வானாயினான்.

27. யோவினுக்கன்பனாகி யுயர்வலி யுடையவீர
மேவுமிவ் விளைவுதேர விழைந்திடு வாயே லென்னைத்
தாவறக் காப்பதாகத் தனிமொழி யளிப்பாயாகில்
யாவருமறியவீண்டு தெரிப்பனா னிமைப்பின் மாதோ.

(இ-ள்.) யோவென்னும் தேவர் பெருமானுக்கு உரிய பக்தனாகி ஒப்பற்ற பராக்கிரமத்தைப் பெற்றிருக்கும் மகாவீரனாகிய அக்கிலனே, நீ இந்நோயின் காரணத்தை அறிய விரும்பும் பக்ஷத்தில், நான் அதைத் தெரிந்து சொல்லவல்லேன். ஆயினும், நீ எனக்கு யாதொரு தீங்கும் வாராமல் காப்பாயென்று அபயமொழி யொன்று உறுதியாகத் தருவாயாயின் அவ்வுண்மையை யாவரும் தெரியும்படி தெரிவிப்பேன்.

28. வேந்தர்செய் பிழைகடம்மை வெளிப்பட விளம்பி யன்னார்க்
காந்துணை யினிமைசெய்யக் கருதுத லெளிதன்றம்ம

வய்ந்திவர் பகர்தனந்நந் திருவினுக் கென்னவுன்னுர்
சாந்துணே யொறுப்பர்சற்றுந் தயையறக் கொடியரன்றே.

(இ-ள்.) அரசர்கள் செய்யும் குற்றங்களை வெளியிட்டுச்சொல்லி அவர்களுக்கு ஒருவரால் ஆன வளவில் நன்மையைச் செய்யவெண்ணுதல் எளிதானகாரியமன்று: அதிப்பிரயாசமாகும். ஏனெனில் அவ்வரசர்கள் அவ்வாறு கருதுகின்றவர்களை இவர்கள் நமக்கு வேண்டினவர்; இவர்கள் சொல்லும் புத்திமதிகள் நமது நன்மைக்கும் லாபத்துக்குமே யாகுமென்றெண்ணுமல், அவை தம்கருத்துக் கிசையாவாயின் அவர்களைப் பகைவர்களாக வெண்ணி அவர்மேல் மாற்சரியம் கொண்டு அவர்கள் ஜீவனுள்ளவரையில் அவர்களை வருத்தப்படுத்துவார்கள். ஆதலின் அஞ்சுகின்றேன் என்றனன்.

29. என்றலுமக்கில் சொல்வா னியம்புக வேதுமஞ்சேல்
ஒன்றெனு மொளியே யுன்னைக் காப்பதென்கடனதாகும்
நின்றுல கனைத்துமென்றும் விளக்கு மங்நெடிய சோதி
துன்றிய சுடரோனுணை சொல்லினே னினியுங்கேட்டி.

(இ-ள்.) அப்போது அக்கிலன் சொல்லுகின்றுன். ஓ காற்கனே, நீ யொன்றுக்கும் பயப்படாமல் உண்மையை வெளியிட்டுச் சொல்லுக. உனக்குத் தீங்குவாராமற்காப்பது என்னுடைய கடமையாகும். உலகமெங்கும் ஒளிவீசிப் பிரகாசிக்கும் கதிர்க்கடவுளாணை நான் இது கூறினேன். அன்றியும் இன்னும் கேட்பாயாக.

30. அக்கிலனென் றொருவன்ஞாலத் தாவியோ டுறையுங்காறும்
புக்குனக் கிடுக்கண்செய்வார் புவியிலர் புலந்துனையேல்
தொக்கநம் படைகட்கெல்லாந் தலைவனுத் தோற்றஞ்சான்ற
மிக்கவிவ் வேந்தன்றானுந் துணிகலன் விளைக்கவூறு.

(இ-ள்.) அக்கிலனென்னும் ஒரு மகாவீரன் இவ்வுலகிலுள்ளவரையில் உன்னை இதன் பொருட்டுத் துன்பப்படுத்துபவர் உலகில் இல்லை. ஆதலால் நீ வருந்தி வாடவேண்டாம். நம்முடைய சேனைகளுக்கெல்லாம் மகாசேனபதியாய்ப் பெருமை பெற்றிருக்கும் வலிமிகுந்திருக்கும் இவ்வரசனும் கூட என் துணையிருக்க உனக்கு இடர்விளைக்கமாட்டான். என்றான்.

31. அளித்தவிவ் வபயமேற்றுள் ளணைந்ததோர் துனுக்கநீங்கிக்
களித்தசிந்தையனுய்ச் சொல்வான் காற்கனுங் கேட்பிர்வெய்யோன்
சுளித்தது துலங்கச்செய்யும் பூசனைக் குறைவானன்று
விளைத்தவித் துயரமற்று வெறிசெயாப் பிழையுமன்றால்.

(இ-ள்.) இவ்வாறு அக்கிலன் தனக்குக் கொடுத்த அபயமொழியைப் பெற்றுத் தைரியம் கொண்டு கவலையற்றுக் களித்தவனுகிஅந்தக் காற்கன் சொல்லுகின்றான்: கேளுங்கள் சபையோர்களே. கதிர்க்கடவுள் நம்மேற் கோபித்ததற்குக் காரணம் அவற்குச் செய்யவேண்டிய வந்தனை வழிபாடுகளைச் சரிவரச் செய்யாமையினுலுமன்று; இக்கொடிய நோயை உண்டுபண்ணி நமக்குத் துயர்விளைத்தது நாம் அக்கடவுளுக்குத் தக்கபடி பலிகள் கொடாமையினுலுமன்று. பின்னை எதனுலென்னில்,

32. வன்பினுல் வேந்தன்றன்னை வழிபடுந்தூய நெஞ்சத்
தன்பினன் மகளைக் கொண்டங் கவற்கவ விழைத்ததாய

துன்பினுற் சுடரோனுய்த்த துயரிது தோகைதன்னை
இன்பினல் விடுக்கினல்லாற் சமித்திடாதிறைய்பு மென்ருன்.

(இ-ள்.) தன்னை அன்போடும் வழிபடும் பூசகனுகிய **கிரிசன**து புதல்வியாகிய **கிரிசை** யென்பவளை அரசன் வலாத்காரமாகக் கொண்டு அக்கிரிசனுக்குச் செய்த கொடுமையினுலே கதிர்க்கடவுள் கோபித்துச்செய்த தண்டனையாகும். அக்கன்னிகையைத் திரும்பவும் அவள் தந்தையிடம் செல்லும்படி விட்டுவிட்டாலன்றி இப்பிணி எள்ளளவும் நீங்கமாட்டாது.—என்ருன்.

வேறு.

33. மாற்றமன்னது கேட்டலு மன்னவன் பெரிதுஞ்
சீற்றமேயின னிருவிழிச் செழுங்கனல் சிதறி
வீற்றிருந்த சிங்காதனம் விடுத்தனன் குதித்துத்
தோற்றுங்காற்கனைக் குறித்திவை சுடுமொழி புகல்வான்.

(இ-ள்.) இவ்வாறு காற்கன் கூறிய வார்த்தைகளைக் கேட்டதும் அரசன் பெருங்கோபங்கொண்டு இரண்டு கண்களினின்றும் தீப்பொறி சிதற இருந்த சிங்காதனத்திலிருந்து குதித்திறங்கி எதிரே நின்ற காற்கனை நோக்கி இவ்வாறு கடுமையான வார்த்தைகளைச் சொல்வா ருயினன்.

34. காலஞானியென் ஜெருபெயர் கவினுற வடைந்தாய்
ஆலமேயெனுங் கொடியன வறைகுவ தல்லால்
ஏலவொன்றெனு மியம்பலை யெனக்கிகல் விளைத்துச்
சீலமல்லன செய்தியே செயிர்மலி மனத்தாய்.

(இ-ள்.) திரிகாலக்ஞானி நானென்று பெருமையாகப் பெயர் வைத்துக் கொண்டு கொடிய விஷம்போலும் வெறுப்பான வார்த்தைகளைச் சொல்லுதலே யல்லாமல் இதவசனங்கள் சொல்லும் சுபாவமே உன்னிடத்திலில்லை. ஓ துர்ப்புத்தி யுடையோனே எனக்குப் பகையுண்டுபண்ணி ஆகாத காரியங்களைச் செய்வாயோ? இஃது உனக்கு அடுக்குமா?

35. எனக்குமென்னருங் குடிகட்கு மிகல்விளைத் திடற்கோ
உனக்கு ஞானியென் ஜெருபெயரிந்துனைக் கேட்டேம்
மனக்கு நேர்ந்தன வழுத்தினை வாய்மையைத் துறந்தென்
தனக்கொர் கேடுசூழ்ந் தனையலாற் சாற்றின்மற்றுளதோ.

(இ-ள்.) எனக்கும் என் குடிகளுக்கும் பரஸ்பரம் கோளும் குண்டியமும் சொல்லிப் பகை மூட்டுதற்கோ உனக்கு திரிகாலஞானி யென்று பெயரளித்து உன்னைக் கேட்டோம். உண்மையைக் கைவிட்டு உன்னிஷ்டப்படி நேர்ந்ததைச் சொல்லி எனக்குக் கெடுதி செய்ய நினைத்ததேயல்லாமல் வேறில்லை.

(இன்னும் வரும்.)

எஸ். முத்து ஐயர், பி. ஏ.

## SOME PRINCIPLES BEARING ON "SCHOOL DISCIPLINE".

## * பாடசாலை ஒழுங்கைப்பற்றிய சில விஷயங்கள்.

"நல்லொழுக்கம்":—தற்காலத்துப் படிப்பினுல் பிள்ளைகளுக்கு நல்லொழுக்கம் பிடிபடுகிறதில்லை என்று சிலர் குற்றம் கூறுவதாகவும், ஏனெனில் அவர்கள் பெரியோரிடத்தும், உபாத்தியாயரிடத்தும் மிக்க மரியாதை காட்டுகிறதில்லை என்றும் மதுராஸ் கல்வி நிருபண சட்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. நன்ருய் ஆராயுங்கால் நமது பாடசாலைகளிலும் நல்லொழுக்க மென்பது குறைந்து கொண்டே வருகின்றது. ஒருமாணக்கன் அடுத்த பையனிடமிருந்து புஸ்தகம், எழுதுகோல் அல்லது இன்னும் வேறேதாவது வாங்கவேண்டியிருந்தால் மரியாதையாய்க் கேட்டு வாங்கிக்கொள்ளாமல் அவன் கையிலிருந்து அவனைக் கேட்காமலே பிடுங்கிக் கொள்ளுகிருன். இடம் மாற்றிக் கொள்ளும்போது ஒருவர் மேல் ஒருவர் விழுந்து இடித்துக்கொள்ளுகிருர்கள். பேசிக்கொள்ளும்போது அவமானமான சொற்களையும் கெட்டவார்த்தைகளையும் உபயோகிக்கிருர்கள். வகுப்பைப்பார்க்க யாராவது வந்து நுழைந்தால் அவர்களைப் பார்த்து பல்லைக் காட்டுவதும், பரிகாசமாய்ப் பேசுவதும் வழக்கம். இவற்றை யெல்லாம் ஒரு ஆசிரியர் அப்போதைக் கப்போது திருத்தாவிட்டால் பிள்ளைகளுக்குக் கெட்டவழக்கம் பிடிபட்டு பெரியோரை வணங்கவேண்டு மென்பதை முற்றிலும் மறந்து விடுவார்கள். அவர்களை நன்னெறியில் நடக்கும்படி செய்வது வருத்த மெனினும் தம்மாலியன்றளவு மெய்வருந்தி நற்போதனைகளைச் செய்து திருத்தவேண்டும். சன்மார்க்கம் புஸ்தகப் படிப்பினுல் ஏற்படாது. வழக்கத்தில் சிறுகச் சிறுக அனுசரிக்கும்படி பழக்கவேண்டும். "நெறியால் நல்லவனென்றறி" என்று William of Wykeham சொன்ன கட்டுரையை ஒரு ஆசிரியர் என்றும் ஞாபகத்தில் வைத்துக் கொள்வாராக.

'பரிசுத்தம்':—இது நல்லொழுக்கத்தின் ஒரு அம்சம் ஆதல் பற்றி சிறிது கூறுவாம். உடலும், உடையும் சுத்தமாயிருத்தல் வேண்டும். நமது இந்தியா தேசமும் உஷ்ண பிரதேச மாதலால் அசுத்தமாயிருந்தால் அளவற்ற நோய்கட்கு இடமாகும். அவற்றுள் சில தொடரக் கூடியவையாயும், வெறுக்கக் கூடியவையாயுமிருக்கும். ஆனதுபற்றி பிள்ளைகளை தினந்தோறும் அழுக்கு வஸ்திரங்களை துவைத்துக் கட்டிக்கொள்ளும்படி செய்யவேண்டும். எவ்வளவு ஏழையாயினும் கந்தைத்துணிகளையும், தான் கட்டிக் கொள்ள ஒவ்வாத உத்திரியங்களையும் உபயோகிக்க விடப்படாது. "ஆடை ஆடவரை அறிவிக்கும்" என்றிருத்தலால் ஒரு ஆசரியர்தான் முதலில் சுத்தமாயிருந்து கொண்டு பிறகு தம்மாணக்கருக்கு அவ்வாறிருக்க போதித்தல் வேண்டும்:

"Regularity (ஒழுங்காய் வரும் தன்மை) and Punctuality (நேரம் தப்பி வாராமை)":—இவற்றின் உபயோகத்தைப்பற்றி Mr. Fowler என்பவர் தமது நூலில் 71-76 பக்கங்களில் விரிவாய் கூறியுளர். ஒரு ஆசரியர் பாடசாலை வேலையை துவக்குவதும், முடிப்பதும் குறிப்பிட்ட காலத்திலேயே செய்து விடுவதும் தவிர Attendance Register (ஆஜர்பட்டி) யை தினந்தோறும் சரிபார்க்க வேண்டும். இவற்றை செய்யப் பிசகினுல் பிள்ளைகள் கிரமம்தப்பி நடக்க இடமுண்டாகும். 'ஒழுங்கு' என்ற சிறந்த குணத்திற்குப் பேர்போன அமெரிக்கா ஐக்கிய மாகாணங்களில் சிலகாலம் உபாத்தியாயர் தொழிலை மேற்கொண்டு பிறகு அந்நாடுகளுக்கே பிரசிடெண்டாக (President) நியமனம் பெற்ற Garfield என்பவரைப்பற்றிச் சிறிது கவனிப்போம். இவர் ஆசரியராய் இருக்கும் நாளிற் பள்ளிக்கு வரும் நேரத்தைப் பற்றி பிள்ளைகள் வெகு விந்தையாய் பேசிக் கொள்வார்கள். இவர் பள்ளியில் நுழைந்ததும் மணியும் அடித்து ஓயுமாம். இவ்வாறுவர ஒரு திவசமாவது தவறுவதில்லை. தேவாலயம், கல்விச் சங்கம், இன்னும் வேறெந்த இடத்திற்காவது போக நேரிட்டால் பிள்ளைகளை சரியான காலத்தில் போய் ஆஜராகும்படி செய்வார். இதை அவர் முதற்கடமையாக போதித்து வந்தார். இவற்ருல் உண்டாகும் நன்மையும் எடுத்து விளக்கினர். தான் அனுஷ்டிக்காத எதை

* An essay read by A. K. Sivarama Aiyar before the Teachers' Association Karur. கரூர் உபாத்தியாயர் சங்கத்தின்முன் படித்த ஒரு வியாசம்.

யும் பிள்ளைகளுக்குச் சொல்வதில்லை. "கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்கவதற்குத்தக" என்ற திருவள்ளுவனார் திருமொழி இவரிடம் மேன்மையாக விளங்கிற்று. ஒவ்வொரு நாளும் தான் கற்பித்ததை தான் முதலில் அனுஷ்டித்துக் காட்டி தம்மாணாக்கரை அபிவிருத்தியடையச் செய்தார்.

"வேலையில் அபிமானம்":—பிள்ளைகளை என்றும் யோக்கியமும், சரியான காரியங்களையே செய்யச் சொல்லித் தூண்டவேண்டும். இவ்வாறு செய்யின் அவர்களே அவற்றின் நன்மையை உணர்ந்து கொள்வார்கள். ஒரு வேலையைச் செய்வதில் பல இடுக்கண்கள் நேரிடினும் அவற்றை ஓராமலும் தன் சொந்த சுகத்தையே பேணி இராமலும் அதைச் செய்துமுடிக்க ஆவலாய் இருக்கவேண்டும். இக்கருத்துக்கிசைய,

"மெய்வருத்தம் பாரார் பசி நோக்கார் கண்டுஞ்சார் எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி அன்மையும்பாரார் அவமதிப்புங் கொள்ளார் கருமமே கண்ணாயினர்" என்று குமர குருபரஸ்வாமிகள் சொல்லியுளர். வேலையைப் பிரதானமாகக் கொண்டு அதை முடித்து பேர் பெற்றவர்களின் சரித்திரங்கள் இருந்தால் பிள்ளைகளுக்கு எடுத்துக் காட்டியும், அவ்வாறு வேலையை சிரத்தையாய் செய்யாதவர்கள் பட்ட அவஸ்தையையும், கேட்டையும் எடுத்துக் கூறவேண்டும்.

இது நிற்க. இனி "இனாம் கொடுத்தல்" "தண்டித்தல்" இவற்றைப்பற்றி சிறிது கவனிப்போம்:

Fitch என்பவர் சொல்லுகிறதாவது "வேலையில் பிரியமுள்ளவனாக ஒரு மாணாக்கனைச் செய்ய வேண்டின் பல வழிகள் உள: (1) புஸ்தகம், அல்லது பணம் கொடுப்பதாகச் சொல்லி படிக்கும்படி செய்தல், (2) மற்ற பிள்ளைகளைக் காட்டிலும் உயர்வாக மதிக்கப்பட வேண்டுமென்ற எண்ணம் உதிக்கும்படி செய்தல், (3) பெற்றோரும், ஆசிரியரும் புகழ்ந்து பேசும் வண்ணம் நடந்து கொள்ளும்படி செய்தல், (4) அபிவிர்த்தி செய்து கொள்ள வேண்டுமென்ற எண்ணம் உதிக்கும்படி செய்தல்." இனாம் கொடுக்கும் ஆங்கில வழக்கம் கெட்டதென ஜர்மனி தேசத்துவித்வான் Dr. Wiese என்பவர் கூறியுளர். மேலும் அவர் இந்தியாவில் இவ்வழக்கம் ஏற்படாமலிருக்க வேண்டுமெனவும் சொல்லியுளர். இனாம் கொடுப்பதனால் உண்டாகும் தீமைகளாவன: 1. 'பரிசு கொடுத்தல்' பிள்ளைகளின் மனசாக்ஷியையும், கல்வியின் கண் இயற்கையாய் உண்டாக வேண்டிய அபிமானத்தையும் இழக்கும்படி செய்கிறது. 2. இது அவர்களுள் ஒரு போட்டியுண்டாகும்படி செய்து மனதைக் கெடுக்கின்றது. 3. பரிசு கிடைக்குமென்ற உறுதியுள்ளவர்கள் தான் மெய்வருந்தி பயிலுவர். ஏனையோர் கவலையற்று தேம்பித்திரிவர். 4. சிற்சிலவேளைகளில் இன்னானுக்குத்தான் கொடுக்க வேண்டுமென்றறிவது வருத்தமாயுமிருக்கும். 5. காரியசித்தி பெற்றவனுக்குத்தான் வெகுமதி ஏற்படுகின்றது. ஆனால் அது சுறுசுறுப்புள்ளவர்களுக்கும், மதிப்புள்ளவர்களுக்கும் கிடைக்கிறதில்லை. 6. வெகுமதிக்காக படிக்க எண்ணம் கொண்டவர்கள் அது இல்லையெனின் கல்விகற்ப தரிதாகும். பரிசளித்தலைப் பற்றி மேற்சொன்ன ஆக்ஷேபங்கள் இருந்தபோதிலும் அதனால் நன்மையும் சிற்றளவு உளதெனப் புலப்படுகின்றது.

"ஒரு பாடசாலை தக்க நிலைமையிலிருந்தால் ஒரு ஆசிரியன் முகமலர்ச்சியோடு சொல்லும் ஒரு வார்த்தையே பிள்ளைகளுக்கு ஓர் பெரிய வெகுமதியாகும். பிள்ளைகள் மெய்வருந்தி சிரத்தையுடன் உழைத்து வருகிறார்களா அல்லது சோம்பேறிகளாய் இருக்கிறார்களாவெனத்தெரிந்து கொள்ள இந்தவெகுமதியால் முடியாது. படிப்பில் சிரத்தை வரும்படி செய்ய இவ்வழி சிறந்ததல்லவேனும் வெகுமதி கொடுப்பது ஒரு விஷயத்தில் சிறந்ததென சொல்லவும் வேண்டும். ஒருவன் தன் பாடசாலையை விட்டு வெகுகாலமாயினும் தான் பால்யத்தில் பெற்ற பரிசுகளைப் பார்க்க நேரிட்டால் தான் ஒரு காலத்தில் அடைந்த கீர்த்தி ஞாபகத்தில்வரவே தான் துவக்கின எந்த வேலையையும் விசேஷ சிரத்தையுடன் செய்ய வேண்டுமென்ற நோக்கம் பிறக்க முக்கிய காரணமாயிருக்கிறது." என்று Mr. Fowler என்பவர் கூறியுளர்.

"Certificates" (யோக்யதாபத்திரங்கள்):—இவற்றின் உபயோகத்தைப் பற்றி Mr. Currie என்பவர் பின்வருமாறு கூறுகின்றனர். "இப்பத்திரங்கள் கொடுக்கும் ஏற்பாடு எவற்றினும் சிறந்தது. மற்றெவ்வித சாமர்த்தியம் இல்லையெனினும் சுறுசுறுப்பு, நன்

னடக்கை ஒரு மாணாக்கனிடத்தில் இருந்தால் இப்பத்திரம் பெற உரித்தானவனாகின்றான். இதை உடைத்தானவனுக்கன்றி ஏனையோருக்கும் உபயோகப்படுகின்றது. எங்ஙனமெனின் இதை பிறர் கண்ணுற்று ஏதேனும் ஒரு வேலையைக் கொடுக்க தகுந்தவனென்றும் அவனுடைய நடை உடைபாவனைகள், குணங்கள், இத்தன்மையதென தெரிந்து கொள்ளவும் காரணமாயிருக்கிறது. இதை யோக்யமான பிள்ளைகள் எல்லாரும் பெறலாம். தங்களுக்கு யாதொரு வெகுமதியும் கிடைக்கவில்லையே என்ற எண்ணம் கொண்டிருப்பவர்களுக்கும் பிரயோசனமாகின்றது. விசேஷகுணம் சில மாணாக்கரிடத்து இருப்பின் அதை எடுத்துரைக்கவும் உதவுகின்றது."

"தண்டனை":—ஒருஆசிரியன் தனக்கடங்கிய பையனைசீர்திருத்தவாவது, அல்லதுமற்றப்பிள்ளைகளும் குற்றஞ் செய்யாமலிருக்கும் படியாவது அவன் மனத்தையாவது அல்லது தேகத்தையாவது வருந்தும்படி செய்வதுதான் "தண்டனை" என்று சொல்லத்தக்கது. 'தண்டனையானது செய்த குற்றத்தைக் கண்டித்து ஏனையோர் குற்றஞ் செய்யாமலிருக்கும்படி செய்யத்தக்கதாக விருக்கவேண்டும்.' என்று Mr. Fowler கூறியுளர். முக்கியமாய் வழங்கக்கூடிய தண்டனைகளாவன: (1) உள்ள இடத்தைவிட்டு கீழே போகும்படி செய்தல். (2) வகுப்பைவிட்டு வெளியே நிற்கச் செய்தல், (3) பாடத்தையாவது இன்னும் வேறெதாவதை வரைந்து வரும்படி செய்தல். (4) விளையாட்டுக்குப் போகாமலிருக்கும்படி செய்தல். (5) ஏகாந்தமாயாவது, வகுப்பின் முன்பாவது, பாடசாலைப் பிள்ளைகளின் முன்னிலையிலாவது அதட்டி புத்தி கூறல். (6) பிரம்பாலடித்தல், (7) பள்ளியினின்றும் நீக்கி விடுதல். இதுநிற்க இனி விதிக்கக்கூடாத தண்டனைகளின் சிலவற்றைப்பற்றிக் கூறுவாம்:

1. பிள்ளைகள் அவமான மெனக்கருதும் தண்டனைகளாகிய காதைத்திருகுவதும், நகங்களால்கிள்ளுவதும் கூடாது. கடுமையான தண்டனை விதிக்க வேண்டு மென்ற எண்ணங்கொண்டு வெயிலில் நிறுத்துவதும், கால்கடுப்ப குனியவைப்பதும், இன்னும் இவைபோன்ற கிராமபாடசாலைகளில் உபயோகித்து வரும் தண்டனைகளை விதிக்கக்கூடாது. 'பரிகாசம்' செய்யக்கூடாது. இதைப்பற்றி Professor Page கூறுகிறதாவது." 'பரிகாசம்' செய்வது ஆசிரியன் நினைப்பதைக்காட்டிலும் பதின் மடங்கு வருத்தத்தை உண்டாக்குகின்றது. இதை சோம்பேறிகளும், கெட்டபிள்ளைகளும் மதிக்கிறதில்லை. ஆனால் யோக்யர்களையும், அடக்க முடையோர்களையும் வருத்துதல் பற்றி இதை ஒருபோதும் செய்யாமலிருப்பாராக." மேற்குறித்த தண்டனைகளைப்பற்றி சிறிது விளக்குவோம்: பாடம் ஒப்புவிக்க வில்லையென்று மறுநாள் அதை எழுதிவரும்படி சொல்லுதலும் (impositions) வீட்டிற்கனுப்பாமல் நிறுத்தி வைப்பதும் நன்மை பயப்பதில்லை. அதிக நுண்ணறிவோடும், ஜாக்கிரதையோடும் இவற்றை விதித்தாலன்றி அதிக கேட்டை யுண்டாக்கும். "அற்பகுற்றத்திற்குக்கூட ஆசிரியர் கோபமாயிருக்கும்போது இவ்வகை தண்டனையை விதித்து வருகிறார். ஒரு நல்ல ஆசிரியர் இவற்றை ஒருபோதும் செய்யத்துணியார். அவர் அதிக கண்டிப்புள்ளவரென தெரிந்தால் பாடங்களைப்படித்தே செல்ல வேண்டும். இல்லை யெனின் தண்டிப்பார் என்று பிள்ளைகள் உணர்ந்து கொள்வார்கள். அப்போது தண்டனை செய்ய இடமே இராது. எவ்வளவுக் கெவ்வளவு தண்டனை செய்கிறாரோ அவ்வளவுக்கவ்வளவுபோதனா சக்திகுறைந்ததெனக் கொள்ளத்தக்கது" என்று Canon Farar கூறியுளர். மேலும் பாடம் வீட்டில் வரையச் செய்வது பையன் மனதிற்கு உற்சாகமின்மையும், களைப்பையும் தருகின்றது. காலத்தை வீணாக்குகிறதும் தவிற கையெழுத்தையும் கெடுக்கின்றது. ஆனால் இதனால் வாத்தியாருக்கு அந்தப் பையனால் வருத்தமிராது என்ற ஒரு விஷயம் தான் ஏற்படும். வீட்டிற்கனுப்பாமல் பிள்ளைகளை நிறுத்திவைத்தால் அவர்களுடைய தேகசௌக்கியம் கெட்டு ஆசிரியரும் பள்ளியில் இருக்க வேண்டி நேரிடும்.

"பிரம்பாலடித்தல்":—விசேஷ குற்றஞ் செய்தவர்களையும், பொய் சொன்னவர்களையும், கெட்ட வார்த்தை பேசினவர்களையும், கட்டுக்கடங்காதவர்களையும் உள்ளங்கையில் பிரம்பால் சில அடிகள் அடிக்கலாமென்று இவ்விராஜதானியின் சர்க்கார் பள்ளிக்கூடங்களில் விதிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் தலைமை உபாத்தியாயர்தான் பிரம்பை உபயோகிக்கலாமென்றும் அவரும் தன்னால் கூடியவரையில் அரி

தாய் இந்த சிட்சை செய்யவேண்டுமென்றும் இருந்தது. இதைக்குறித்து Thring என்பவர் கூறுகிறார். "பாடசாலை ஒழுங்கு மீறி நடந்தவர்களையும், கோம்தப்பி தினமும் வருபவர்களையும், சொற்படி கேட்காதவர்களையும் இன்னும் இவை போன்றகுற்றஞ்செய்தவர்களையும் பிரம்பாலடித்தல்வேண்டும்.*

முற்காலத்தில் இங்கிலாந்தில் பள்ளிக்கூடங்களிற் பிரம்பாலடிப்பது சாதாரணமாயிருந்தது. ஒவ்வொரு அற்பகுற்றத்திற்கும் பிரம்பை உபயோகித்தார்கள். தற்காலத்திலேயோ அது நின்று போய்விட்டது. 'நான் சிறுவனாய் பள்ளிக்கூடத்தில் வாசிக்கும்போது சுறு சுறுப்புள்ளவனும், அவ்வளவு மந்தபுத்தி இல்லாதவனுமிருந்தேன். என்றாலும் வாய்ப்பாடு ஒப்புவிக்கும்போதும், லத்தீன் இலக்கண பாடத்தில் ஏதேனும் ஒருவரிதவறிப்போனாலும், ஒருவார்த்தைக்கு சொல் இலக்கணம் சொல்லத் தப்பிபோனாலும் என் வாத்தியார் என்னை கைநீட்டச்சொல்லி என் பூபோன்ற உள்ளங்கையிற் பொறுக்க முடியாதபடி பிரம்பாலடிப்பது வழக்கம். என் தோழர்களின் முதுகு தடித்துப்போய் இரத்தம் பீறிடுவதையும் கண்ணுற்றிருக்கிறேன். அங்ஙனம் இக்காலத்தில் நிகழ் உறி அவர் தண்டனைக்கு உள்ளாவார் என்பதில் சந்தேகமில்லை. இத்தகைய பள்ளியின் கொடுங் கோன்மை முற்றிலும் நின்று விட்டது." என்று Canon Farar சொல்லியுள்ளர். Lawrence பிரபுவைப் பற்றி எழுதிய Bosworth Smith என்பவர் அந்தப் பிரபுவைப்பார்த்து அவர் காலத்து படிப்பு எவ்வாறென சிலர் கேட்டதற்கு தான் அடிபடாத நாள் இல்லை என்றும் தற்செயலாய் எதாவதொரு நாளில் அடியில்லாமற்போனால் மறுநாள் இரட்டிப்பாய் அடிபட்டிருப்பதாகவும் கூறியுள்ளார் என்பதை வெளியிட்டு இருக்கின்றனர்.

"பள்ளியைவிட்டு அகற்றல்";—இதைச்செய்ய ஆசிரியர் ஒருபோதும் துணியக்கூடாது. தன்னாலியன்றளவு நற்போதனைகளால் மாணக்கனை சீர்திருத்தமுயலவேண்டும். எவ்வகையிலும் தன்னால் முடியவில்லை என்று கண்டபிறகு தான் இவ்வாறு செய்யவேண்டும்.

* Vide Tower P. 25 Fitch P. 120. Bain on Education as science P. 114—117.

"பாடசாலையின் விதியாலும், வாத்தியாயராலும் ஒரு பையனை சீர் திருத்த முடியவில்லை என்று கண்டு கொண்டாலன்றி அவனை நீக்கக்கூடாது. ஏனெனில் பயிற்சிசெய்யும் வண்ணம் பாடசாலைகள் ஏற்பட்டது. நல்லவர்களும், கெட்டவர்களும் வருவார்கள். ஒவ்வொருவனையும் நல்லவழியில் திருப்பி அதனால் உண்டாகும் மேன்மையை போதித்து கெட்ட வழிகளை அனுசரிப்பதால் வரும்கேட்டையும் எடுத்துக்காட்டவேண்டும். இவ்வாறின்றி பையனை நீக்கிவிட்டால் ஆசிரியரின்பால் உள்ள பயிற்சி சக்தியை கெடுத்து விடுகிறதுமன்றி வழிபிசகிப்போனால் பள்ளிக்கூடத்தை விட்டுப்போகிறதைத்தவிற வேறுகதி இல்லை என்றும் நினைக்கும்படி செய்யும். சுளுவாய் இருக்கிற தெனநினைத்து இங்ஙனஞ் செய்தல் ஏலாது" என்று Mr. Thring என்பவர் சொல்லியுளர்.

"உபாத்தியாயர் கண்டிப்பாய் இருந்தால் அதுவே போதும். மற்றெவ்வித தண்டனைகளும் அவசியமில்லை. ஒழுங்கு (Discipline) கெடாமலிருந்தால் இதுவே முக்கிய சாதனமாகக் கொள்ளலாம். சிட்சை குன்றிய கலாசாலையின் சீர் சிறந்தது." என்று 'Fitch' என்பவர் கூறுகிறார்.

இதுநிற்க, இனிப் பாடசாலை ஒழுங்கிற்கு இன்றியமையா "விளையாட்டு" என்பதைப்பற்றி சற்றுகவனிப்போம். "இந்து பிள்ளைகள் ஒருபோதும் விளையாடுவதில்லை" என்று சிலவருடங்களுக்கு முன்பு மதிராஸ் இராஜதானி கல்விஇலாகா தலைவர் Director of Public Instruction, Madras Presidency தமது வருஷாந்தர ரிபோர்ட்டில் சொல்லியுளர். அக்காலத்தில் இவர் புகன்றது மெய்ம்மையே. ஏனெனில் தேக அப்பியாசத்தைப்பற்றி கவனிக்கிறதில்லை. பள்ளிக்குப் போகையிலும், வருகையிலும் ஏதோ உயிருள்ள ஜந்துக்கள் உலாவுவதாக இருந்ததே ஒழிய உற்சாகமும், தேக சவுக்கியமும் உள்ளவர்களாக இருந்ததாகக்காணேம். ஆனல் இப்பொழுதோ அவ்வாறின்றி சிறிது தேகாப்பியாசம் பயிலும் வழிகள் ஏற்படவே அவற்றில் ஆவலாய் இருக்கிறார்கள். சுத்தகாற்றில்லாமலும், தேகாப்பியசமில்லாமலும் சரீரம் ஆரோக்கியமாயிராது. தேகாப்பியாசம் இப்போது பாடத்தின் ஒரு அம்சமாய் சேர்த்திருக்கிறார்கள். பிள்ளைகளை விளையாடச்செய்து அவர்களை உற்சாகப்

படுத்திக்கொண்டு இருக்கவேண்டியது அவசியமென ஏற்பட்டுபோயிற்று. வயதுக்கும் திறத்திற்கும் தக்க வாறு பயிலச்சொல்லவேண்டும். சிறிது அசட்டையா யிருந்தால் பிள்ளைகள் கைகால் முறித்துக்கொள்ளும் படி நேரிடும். பள்ளிக்கூடத்து அப்பியாசத்தைத்த விற வெளியே மைதானங்களிற் பலவித விளையாட்டு களாகிய (Foot-Ball, Badminton, Lawn Tennis, Cricket, &c.) முதலியவைகளை ஆடச்சொல்லி தா னும் அவர்களோடு கலந்திருக்கவும் வேண்டும். விளை யாடும் மைதானத்தில் பிள்ளைகளுக்கு பொறுமை, அடக்கம், பரஸ்பரநேசம், தயாளம், உண்மை, முத லிய சிறந்த குணங்களைப் போதிக்க பல சமயங்கள் நேரும். பிள்ளைகளின் குறைகுணங்களையறிய 'விளை யாடுமிடம்' தான் உசித்தானதென்று Mr. Stow என்பவர் உணர்ந்து அதை ஓர் "கட்டடமில்லா கலா சாலை" என்று வற்புறுத்திக் கூறியுள்ளர். விளையாட் டால் வீண்காலம் போயிற்றென்று ஒரு ஆசரியர் நினை க்கக்கூடாது. ஏனெனில் இதனல் அவர்கள் பலசா லிகளாகி, தேகசவுக்கிய மடைந்து பள்ளிக்குச் சரியா ய்வரவும் சொற்படி கேட்கவும் பாடத்தில் சிரத்தை உண்டாகவும் ஏற்படுகின்றது. பாடசாலையின் சீரும் பொலி வுற்றுவிளங்குமென்க.

ஏ. கே. சிவராமஅய்யர்.

---

## * "HUMAN PERSONALITY & ITS SURVIVAL AFTER BODILY DEATH."

## "தேகவியோகத்துக்குப் பின்னும் மனுஷஜீவன் நசியாமல் ஜீவித்தி ருக்கிறது" என்னும் உண்மை.

---

இதுவிஷயமாக மிஸ்டர் எப். டப்ளியு. எச். மை யர்ஸ் என்பவர் 700—பக்கங்கள்கொண்ட இரண்டு புத்தகங்கள் எழுதியிருக்கிறார். இதை யெழுதின வர் இங்கிலாந்தில் பேர்போன கிரந்தகர்த்தா. அனேக உயர்ந்த கிரந்தங்கள்எழுதி வித்யா விற்பன்ன சிரோமணியெனப் பெயர்வாங்கியிருக்கிறார். இவ ருக்கு புத்திவன்மை ஜாஸ்தி. காலநோக்கத்துக்குத் தக்கபடிதத்தவ ஆராய்ச்சிசெய்யும் சாமர்த்தியம் வா ய்ந்தவர். இவர் எழுதிய இக்கிரந்தம் இவருடைய மற்ற கிரந்தங்களெல்லாவற்றிலும் மேலானது. இதில் இ வர் விசாரிக்கப் புகுந்தவிஷயமென்னவெனில் மனித னுடையதேகம் விழுந்தவுடனே அவன் நசித்துப் போகிறானு அல்லது தேகவியோகத்துக்குப் பின்னும் மனுஷஜீவன் நசியாமலிருக்கிறதா? என்பதே. இந்த விஷயத்தை ஆராயப் புகுந்ததில் இவர் இதைப்பற்றி முன்னோர் அபிப்பிராயத்தைச் சிறிதும் கவனிக்க வில்லை. மத கிரந்தங்களிலுள்ள உண்மைகளையாவது மதக்குருவர்கள் அபிப்பிராயத்தையாவது இவர் லக்ஷி யம் செய்யவேயில்லை. ஆனல் இவர் எப்படி இதை ஆராயப் புகுந்தார் எனிலோ? இக்காலத்தில் பூத, பௌதிக, தத்துவ, வானசாஸ்திரங்கள் எப்படி மனி தன் புத்திக்குப் புலப்பட்ட விஷயங்களைக்கொண் டேயாராய்ந்து அவ்விஷயங்களிற் பொதிந்துகிடக்கும் உண்மையைக் கண்டுபிடித்து, விஷயஞானத்தைக் கொண்டு தத்துவஞானம் இன்னதென்று அறிந்து கொண்டார்களோ அப்படியே இதையாராய்வதிலும் மதக்கொள்கைகளைவிட்டு, உண்மையாக வெளிவந் துள்ள விஷயங்களையே ஆதாரமாகக்கொண்டு அவ் விஷயங்களிற் பொதிந்துகிடக்கும் தத்துவத்தை யாராய்ந்து தீர்மானித்திருக்கிறார்.

இந்நூலாரம்பத்தில் இந்த விஷயத்தின் உண் மையை, புலனறிவைக்கொண்டும், பரீக்ஷைகள்செய் தும் ஆராய்ந்து அறியச்செய்த பிரயத்தனங்களின் வரலாறுகூறி, மனுஷஜீவன் ஏகனேயாயினும் அதில டங்கிய அகங்காரதத்துவம் ஜீவ அஹங்காரம், பரம அஹங்காரம் (Lower and Higher Self) என இரு வகைப்படுமென்று வாதித்து அதனுண்மையை ஸ்தாபிக்கிறார். பிறகு தேகமழிந்த பின்னும் மனு ஷன் அழியாமைக்கு சாக்கிர ஸ்வப்னவஸ்தைகளில் உயிரோடிருப்பவர்க்குத் தோற்றியிருக்கிற கேஸ்களை யெடுத்து ஆராய்ந்து தேகவியோகமான பின்னும் ஜீவன் உயிரோடிருக்கிற உண்மையை ஸ்தாபிக்கிறார். இத்தலைப்பில் இவர் ஆராயும் ஜீவத்தோற்றங்கள் "ஆகாயவாசிகள், பூதகணங்கள், தேவகணங்கள், சித்தகணங்கள்" என்று ஹிந்துக்கள் வகுத்துள்ள அசரீராத்மாக்களிலடங்கும். தேகத்தையொட்டி, தேக

*By Frederic W. H. Myers, 2. Vols. 42 s. Longmans Green & Co.

மே பிரதானம், மனம் தேகத்திலிருந்துண்டானது என்று தர்க்கித்து (Anthropologists) தேகமே யான்மாவென்றுவாதிக்கும் நியாயவாதிகள், மனிதர்க்குள்ள அபூர்வமான அபாரமனோசக்தி (Genius) அவன் மூளையிலுண்டான கோளாறு காரணமாக உண்டானதென்று சொல்வதையாராய்ந்து அது பிசகென்றும், மனிதனிடத்து அபூர்வமாகத்தோற்றும் அபாரமனோசக்திஎல்லாரிடத்துமுள்ளதேயென்றும், அதைமற்றவர் பயிற்சி செய்யாமல் பாழாகப் போட்டிருக்க, அபூர்வமாகச் சிலரிடத்து அது பயிற்சி பெற்று விளங்குவதால், அவர்களிடத்து அச்சக்தி பிரசன்னமாகவும், மற்றவரிடத்து பொதிந்தும் விளங்குகிறதென்று ஸ்தாபித்து, இந்த அபார மனோசக்தியானது மற்றவர்களைவிட தூரதிர்ஷ்டியோடு எட்டிப்பார்க்கும்சக்தியே யன்றிவேறல்ல. நம்மவர்கள் இதை ஞானதிர்ஷ்டியென்பார்கள். தூக்கத்தில், அன்பிலீடுபட்டவிடத்தில், வசீகர சக்தியில், நேரும் விஷயங்களைக்கொண்டு, மனிதனிடம் ஜீவ அஹங்காரமன்றி பரம அஹங்காரமும் ஒன்றிருக்கிறது என்று நிரூபித்துக் காட்டுகிறார். கடைசியில், உருவெளித் தோற்றம், ஞான தரிசனம், பாவஸம்யோகம் (Telepathy) என்னும்சம்பவங்களின் உண்மையையும் உள்விதியையும் இந்த பரமஅஹங்கார விசேஷத்தைக்கொண்டு விளக்கிக்காட்டுகிறார்.

இரண்டாவது புத்தகத்தில்மாண்டவர்கள் "ஆவேசரூபமாக" த்தோற்றும் தோற்றங்கள் முதலான சம்பவங்களைக்கொண்டு உண்மை ஆராய்ந்து, தேகம் விட்டு இறந்த பின்னும் மனுஷஜீவன் நசியாமலிருக்கிறது என்னும் உண்மைக்கு ஆதார நியாயங்கள் கூறி ஸ்தாபிக்கிறார். இதிலே அசரீரிவாக்கு, ஆகாசவாக்கு இவைகளின் உண்மையும் ஆராய்ந்து கூறப்படுகிறது. கடைசியில், **சமாதி**, **பரவசம்**, வசியம் இவைகளுடைய உண்மையை விஷயானுபவத்திலிருந்து எடுத்துரைத்துக் கடைசியில் அவருடைய ஆதாரநியாயங்களை யெல்லாமெடுத்துக்கூறிஆராய்ச்சி முடிவில் அறியத்தக்க தென்னவெனில் மனிதனை இப்படி ஊகித்து ஆராய்ந்து பார்த்தால் அவன் **தேகம் தேகி**யென்றிவ்வகையாகச் சேர்ந்துள்ளனென்றும், தேகம் விழுந்தபின்னும் அவன் தேகியாக, ஆத்மாவாக விளங்குகிறானென்றும் ஒப்புக்கொள்ளவேண்டியது அவசியமாகிறதென்று முடிக்கிறார். இவருடைய ஆராய்ச்சியினால் இன்னும் ஒரு நூற்றாண்டில், புத்தியுள்ள மனிதர் எல்லாரும் **ஆத்மாவில்** நம்பிக்கைவைக்கவேண்டியவர்களாவரென்றும், கிறிஸ்து மரித்தெழுந்தார் என்றால் இப்போது நம்பாமல் தலையையசைப்பது முற்றும்போய், அது உண்மையேயென்று எல்லாரும் நம்பவேண்டிவருமென்றும் உறுதி கூறி இந்த உண்மையின்மேல் இனி ஒரு மதமேற்படுமென்று சொல்கிறார். அனாதிகாலமாயுள்ள உண்மையை இப்படி ஒவ்வொருவரும் ஒருவழியாகச் சென்று நான் கண்டதுண்மை நீகண்டதுண்மையென்று யானை கண்ட குருடர்போல் பிரமாதமாக வாதப் பிரதிவாதம்செய்தெழுதிவருகிறார்கள். கடைசியில் உண்மையை உள்ளபடி ஸ்வானுபவத்திற் கண்டவர் இவர்கள் சண்டப் பிரசண்டமாய்ச் சொல்வதெல்லாம் ஒரு உண்மையையேயென்று உள்ளங்கை நெல்லிக்கனி போலுணர்வார். ஏசுகிறிஸ்து "It is the letter that killeth, but the Spirit saves" என்றது உண்மை. பதார்த்தத்தை நாடியலைந்தால் பேதபுத்தியும் வீண்வாதமும் தான் லாபம். பதார்த்தத்தைத்தள்ளி உள்ளதையுள்ளபடி யாராய்ந்தறிந்தால், ஆத்ம தரிசனமாய் ஆத்மஞானம் பெற்று அகண்டானந்தப் பெருங்கடலிலமிழ்ந்து விளையாடலாம். இவ்வுண்மையையுணர்ந்தாரேஉயர்ந்தார். மற்றவர், பாவனா ரூபமான பிறவிக் கடலினின்றும் கரையேறிப் பரமானந்த மனுபவிப்பதில்லை. ஓம் தத் ஸத்.

C. V. S.

---

## * "NOW," A JOURNAL OF AFFIRMATION.

## சங்கல்பசாதனா முறையுரைக்கும் "நௌ" என்னும் அமெரிக்கா பத்திரிகை.

---

"நௌ" என்றால் "இப்போ," "தற்காலம்" என்று சாதாரண அருத்தம். **நித்யம்** என்பது பரமார்த்தம்.

* Devoted to the education of man in the use of his Spiritual faculties, the unfoldment of Psychic Power and the development of Self-control. Monthlyl $/. Henry-Harrison Brown, Editor. "Now Folk," 1437, Market street, San Francisco. cal.

"போனகாலம், வருங்காலம் இரண்டும் ஒன்றே: அவ்விரண்டையும் தற்காலத்தில் காணலாம்" என்று ஒரு அமெரிக்கா கவிசொல்லியதின் உண்மையை அனுசரித்து திரிகாலமும் தற்காலத்திலடங்கும் ஏககாலமாம் என்பதை சித்தாந்தமாகக்கொண்டு இப்பத்திரிகை யேற்பட்டுள்ளதால் இதற்கு "Now" என்றுபேர் கொடுக்கப்பட்டதாகத் தெரிகிறது. இது இன்றைக்கு 100 வருஷங்களுக்கு முன் அமெரிக்காவில் ஜனித்த எமர்ஸன் என்னும் மஹானுடைய சித்தாந்தத்தை யனுசரித்து அவர் வழிப்பட்ட அவருடைய சிஷ்யவர்க்கங்களில் ஒருவரால் நடத்தப்பட்டு வருகிறது.

இப்பத்திரிகையின் நோக்கம் எமர்ஸன் போதித்த உண்மையை அனுபவத்தில் எல்லாரும் அனுஷ்டித்து அதனால் வரும் ஆனந்தத்தையடையச் செய்யவேண்டுமென்பதே. எமர்ஸன் என்பவர் சுத்தாத்வைத சித்தாந்த மஹானுபவர். இவர் பகவத் கீதையின் உண்மையைக் கிரகித்து அத்வைதபாவத்தின் மேன்மையையுணர்ந்து ஆத்மஞானமே எல்லாவற்றிலும் மேலானஞானமென்றுகண்டு அந்தப்படிதான் வசித்ததன்றி உலகவிஷயங்களையும் ஆத்மார்த்தமாகவுணர்ந்துநடத்தலே உண்மையான உயிர்வாழ்க்கையாமென்றும் மற்றதெல்லாம் பொய் வாழ்க்கையாமென்றும் போதித்துவந்தார். இவர் எந்த ஜாதி மதக் கொள்கைகளுக்கும் கட்டுப்பட்டவராகவின்றி எல்லாவற்றிலுமுள்ள உண்மையை உளக்கண் கொண்டாராய்ந்து விளக்கிவந்தார். இவர் மனுஷன் கடைத்தேறுவதற்கு சத்தியவிரதமும் அன்பு நோன்புமே இன்றியமையாச் சாதனங்களாமென்று கண்டு அப்படியே அவைஇரண்டையும் உபாசித்து அதிமேலான ஆத்மஞானம் பெற்று விளங்கினர். இவருடைய மதம் சத்தியமதம். "சத்தியமே விதி, சத்தியமே கதி, சத்தியமே ஜயம்" என்ற உண்மையை மேற்கோளாகக்கொண்டுநடந்துவந்தவர். அனுபவரீதியாய் அவ்வுண்மையை உலகத்தில் எல்லாவிஷயங்களுக்கும் பொருந்த அமைத்துப் போதித்துவந்தவர். மனிதன் தன்னில் ஜகத்தையும் ஜகத்தில் தன்னையும் காணவேண்டுமென்றும் காணுமுபாயம் இன்னதென்றும் காட்டியவர் இவர். அகத்தூய்மையே ஆஸ்திகமதமென்னுங் கொள்கையை உண்மையாகக்கொண்டு அனுசரித்தவர். மேற்றிசையாரில் சத்தியத்தைக்கண்டு உபதேசித்தவர் இவரைப்போல் உண்மையானவர் வேறு எவருமில்லை. வேதாந்த உண்மைகளையெல்லாம் ஸ்வானுபவத்தில் கண்டு உலக வாழ்க்கையில் அவ்வுண்மையை யனுசரித்து வாழும் வகையுணர்த்திய உத்தமர். இவர் 1803-ம் ஞூ பிறந்து 70 வருஷங்களுக்கு மேல் ஜீவித்திருந்தார். அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் இவருடைய தத்துவோபதேசங்களை மிதிக்காதவர் இல்லை. எந்த ஜாதி மதஸ்தாராயினும் இவர் போதித்த உண்மையை உண்மையென்றே ஏற்றுக்கொள்வர். அவ்வளவு நளினமாகவும் சாமர்த்தியமாகவும் பிறர் மனதுக்கும் கொள்கைக்கும் விரோதமின்றியும் உண்மையை யுள்ளபடி யுரைப்பார். இவர் சாதாரணமாக வழங்கும் கிறிஸ்துமதத்தின் அனுஷ்டானங்களில் சிலவற்றை உண்மைக் கொவ்வா தனவென்று நிராகரிக்க, இவரை அம்மதக்குரவர் வேலையினின்றும் நீக்கினர். இவர்சத்தியத்தைக் கைப்பிடித்து உறுதியா யுழைத்துவந்ததால் கடைசியிலெல்லாரும் இவரை மேலான ஞானியாக அங்கீகரித்து ஏற்றுக்கொண்டார்கள். சும்மா வளர்த்தியென் ? இவர் ஒரு பெரிய வேதாந்த ஞானி. மகானுபவி. உளக்கண் திறக்கப்பெற்றவர். சத்தியத்தை யெம்மதத்தில் கண்டாலும்சந்தோஷமாய் ஏற்றுக் கொண்டாடும் நர்ம சிந்தையுள்ளவர். பகவத்கீதையில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் உபதேசித்துள்ள உண்மைகளை யுள்ளபடி யுணர்ந்து மகிழ்ந்தவர். இவர் எழுதியுள்ள பிரபந்தங்களில், பகவத்கீதை, ஸ்ரீ கிருஷ்ணன், விஷ்ணுபுராணம், உபநிஷத் இவைகளின் உண்மையை உணர்ந்து இவைகளைத் தான் ஸ்தாபிக்க முயலும் உண்மைகளுக்கு மேலான அத்தாக்ஷிகளாக எடுத்துச் சொல்லியிருப்பதைப் பாக்கக் காணலாம். இப்படிப்பட்ட மஹான் பிறந்து இன்றைக்குச் சரியாக 100 வருஷங்களாகின்றன. இவருடைய சிஷ்யர்களில் ஒருவர் தான் இப்பத்திரிகையை நடத்தும் ஹென்ரி ஹாரிஸன் ப்ரௌன் என்பவர். இவருடைய கொள்கை யென்னவெனில்: இதுவரையில் துவைதபாவத்தை யனுசரித்து உலகம் உண்மையுணராது தடுமாறலாயிற்று. அத்வைத பாவத்

றதையனுசரித்துப் பார்த்தால் இதுவரையில் மனுஷன் புத்திக்கெட்டாது மயக்கம் விளைத்த விஷயங்களெல்லாம் உண்மையாக உள்ளபடி விளங்கக் காணலாமென்பதே. இவருடைய பத்திரிகையின் முக்கிய பாவம் என்னவெனில்: நான் என்பது இந்த தேகமல்ல மனதல்ல, புத்தியல்ல: ஆனால் வளர்பிரைச் சந்திரனைப்போல் விர்த்தியாய் விளங்கும் ஆத்மா. இந்த உண்மையை யுணர்வதெப்படியெனில்: அதற்கு ஒரு மாறுவிதியுண்டு. பூமியின் ஆகர்ஷண சக்தியைப் போல் அது ஒரு மாறுதவிதி. மனிதன் அதை அறிந்துணர்ந்தாலும் சரி உணராவிட்டாலும் சரி; அது மாறுவதில்லை. ஆகாயத்திலெறிந்த கல் எப்படி பூமியில் வந்து விழுகிறதன்றி வேறெங்கும் போவதற்கு சாத்தியமில்லையோ அப்படி பாவதத்துவத்தில் அதர்வது எண்ணங்களைப்பற்றிய உண்மையில் மனிதன் தன்னை என்னமாக நினைக்கிருனே அப்படியே ஆகிருன். இந்த உண்மையை சாஸ்திராராய்ச்சி முறையிலுழைப்போர் ஐயந்திரிபற ஆராய்ந்து நிரூபித்திருக்கிருர்கள். மனிதன் தன் உயிர்வாழ்க்கையை நடத்த எண்ணங்களையே கருவிகளாக உபயோகிக்கிருன். ஒரு காரியத்தைச் செய்ய மனிதன் உறுதியாக நினைக்கிருன்- அவன் உறுதியாய் நினைக்கும் நினைவு மேகத்திலிருந்து மழை, பனியும், அவை மூலமாக ஆறு, குளங்களில் ஜலமும், அவை மூலமாக பயிர் பச்சைகள் விர்த்தியும், அவை மூலமாக ஜீவஜந்துக்களுக்கு போஷணையும் விர்த்தியு முண்டாவது போல், மனிதன் உறுதியாய் நினைக்கும் நினைவினுல் அவன் தேகம் முதல் மற்றப்படி உலகிலுண்டாகுமெல்லாம் விளைகின்றன. இந்த உண்மையை நம்முன்னேர் உணர்ந்தே எந்தக்காரியத்திற்கும் சங்கற்பத்தை முதலாரம்பமாக ஏற்படுத்தியுளார். "சங்கற்பம் வீண்போகாது" என்பது ஒரு பெரிய உண்மை. அந்த உண்மையை நாம் அறிந்தாலும்சரி அறியாவிட்டாலும் சரி அது பலித்தே தீரும். ஆகாயத்தி லெறிந்த கல், கீழே விழுவதை ஒருவன் பார்த்தாலும் பாராவிட்டாலும் அது மறுபடியும் பூமியிலேயேதான்வந்து விழுமென்பது எவ்வளவு உறுதியோ அவ்வளவு உறுதியாய் நீ நினைக்கும் நினைவுகளும் எண்ணங்களும் திரும்பி வந்து உனக்கே பலனைக்கொடுக்கும். எண்ணம், அல்லது நினைவு, (பவம்), மின்சாரத்தைப்போல் அபார சக்திவாய்ந்துள்ள ஒரு வஸ்து. அதை நீ கண்ணால் காணக்கூடாவிட்டாலும் அதன் சக்தி குறைகிறதில்லை. சித்த புருஷர்கள் சக்தியெல்லாம், இந்த நினைவின் சக்தியையும் அதன் விதியையும் உணர்ந்து அனுசரிப்பதனுல் வருவதன்றி அதில் வேறு அதிசயம் ஒன்றுமில்லை. சாதாரண ஜனங்கள் இந்த உண்மையுணராது எதையும் உறுதியாய் ஏகாக்கிராந்த சித்தராய் நினையாமல், மணல் வீடு கட்டி விளையாடும் குழந்தைகள் ஒருபக்கத்தில் அவர் அமைத்த அமைப்பை இன்னொருபக்கம் அமைக்கையில் காலால் மிதித்தும் கையால் கலைத்தும் அழித்தழித்துக்கட்டி முடிவில் கட்டமுடியாது கைசலித்துத் தூங்கிவிடுவதுபோல் அறியா ஜனங்கள் தாங்கள் நினைக்கும் நினைவை தாங்களே அதற்கு எதிர் விரோதமான நினைவுகளால் அழித்து உருவெடுக்க விடாமற்செய்து நினைப்பது மழிப்பதுமாய்த் தங்கள் காலத்தையும் சக்தியையும் அவமே கழித்து அந்தியம் வந்த காலத்தில் இத்தேகத்தைவிட்டு மறுதேகமெடுத்துப்பின்னும் பின்னும் இப் பவக்கடலில் விழுந்துழல்கிருர்கள். எந்த அனுபவமும் முதலில் அவசியம். ஏனெனில் அனுபவிக்காமல் ஒன்றையும் உணரமுடியாது. அனுபவமே அறிவுக்குக் காரணமாம். அனுபவித்தறிந்தபின் அந்த அனுபவத்தையே திரும்பித் திரும்பி யனுபவித்து வருவதால் நாம் நூதனமாயறிவ தொன்றுமில்லையால் அந்த அனுபவம் நமக்கு சுகத்தைக் கொடுக்காது துன்பத்தைக் கொடுக்கிறது. இது நித்தியப்படி யனுபவத்தில் எவருக்கும் பிரத்தியக்ஷமாம். இப்படி இந்த ஜகமே மனிதசங்கல்பத்தால் உண்டானதாயிருப்பதால், அந்த சங்கல்ப விதியை யனுசரித்து மனிதன் எதையும் தனக் கிதமாகச்செய்து கொள்ளலாமே. இந்த மர்மத்தை பிரத்தி யக்ஷப்பிரமாணங்களாலும் அனுபவரீதியாகவு மெடுத்துக்காட்டுவது இப்பத்திரிகையின் நோக்கமாம். இதன் நோக்கத்தை யனுசரித்து மனுஷன் நித்யசுகமனுபவிக்க ஒரே வழியுண்டாதலால், அவ்வழியிற் செல்லலவசியமென்பதும் அவ்வழியிற்செல்வோர் எல்லீர் இடர்களையும் வென்று துன்பங்களைந்து துக்கம் நீங்கிச் சுகவாழ்வு வாழலாமென்பதுமே இப்பத்திரிகாசிரியரின் கருத்து.

இதை யவர் தம் சொந்த அனுபவத்தில் அனுஷ்டித்துக் காரியசித்திபெற்றதால், இதை யெல்லாருக்கும் போதிக்கக்கருதி இதையே அவர் பெருங்கடமையாகக்கொண் டுழைக்கத் தலைப்பட்டிருக்கிறார். இதற்கு மருந்து "நான் ஸர்வவல்லமையுள்ள ஆத்மா." என்று சங்கல் பித்துக்கொண்டு அந்த சங்கல்பந் தவறாது நடப்பதேயாம். இதையே வேதாந்தபாஷையில் சொன்னால் "அஹம்ப்ரஹ்மாஸ்மி" என்னும் மகாவாக்கியத்தை சிரவணமனன நிதித்தியாசங்களால் இடையறாது சிந்திக்க இஷ்ட சித்திகளும் நித்ய சுகமும் பெருவாழ்வும் பெற்றுய்யலாமென்று சொல்லலாகும். இப்படி பாவனையால் எதையும் வெல்லலாமென்பது ரிபுகீதையில் வெகு நன்றாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இப்பொழுது "Now" என்ற பதத்துக்கு "இப்போ" அல்லது 'தற்காலம்' என்கிற பத அர்த்தம் செய்வதைவிட்டு "நித்யம்" என்று இலக்ஷியார்த்தம் செய்துகொண்டு இப்பத்திரிகையைப் பாவித்தலே பொருந்து மென்பது இதை வாசிப்போருக்குத் தெள்ளென விளங்கும். நித்யத்துவத்தைப் போதிக்கக் கருதியதால் அந்த எண்ணம் விளங்க அதன் கருப்பொருள் விளங்கும் வார்த்தையாம். "நித்யம்" என்பதற்கேற்ற இங்கிலீஷ் வார்த்தையை இதற்குக் காரணப் பேராக வாண்டது முற்றும் பொருந்துமென்பது இனிச் சொல்லாமே விளங்கும்.

இப்பத்திரிகையின் முடிவுநோக்கம் சித்த ஜெயோபாய முரைப்பதேயாம். இதன் கொள்கை முற்றும் ரிபுகீதையில் "சித்த ஜெயோபாய முரைக்குமத்தி யாயத்தில் நன்றாக விளக்கியிருக்கக் காணலாம். சித்தஜெயத்துக் குபாயமும் சித்தஜெயமே எல்லா சித்தி முத்தி யோக ஞானமுமாமென்பதும் பின்வரும் இருபாக்களில் நன்றாகச் சொல்லப்பட்டிருக்கிறது:—

சித்தமெனவொரு பொரு ளிங்குள்ள தென்று
சிறிதேனுஞ் சிந்தித்தா லுடனேசித்தே
சித்தமதாய்த் தோற்றியிடு மதுவே சீவ
செகபரமாய்த் தோற்றுமதாற் றுன்பமுண்டாம்
புத்திரனே யாதலினாற் சித்தமென்றோர் [னும்
பொருளென்றுமில்லை யெல்லாஞ் சித்தே யென்



இத்திறமா முறுதியினன் சித்தந்தன்னை
யெளிதாகச் செயித்தென்று மின்பஞ்சார்வாய்.

சித்தசெய மாத்திரமே மகத்தாம் வெற்றி
சித்தசெய மாத்திரமே மகத்தாஞ் சித்தி
சித்தசெய மாத்திரமே மகத்தாம் யோகஞ்
சித்தசெய மாத்திரமே மகத்தாம் ஞானஞ்
சித்தசெய மாத்திரமே மகத்தாஞ் சுத்தி
சித்தசெய மாத்திரமே மகத்தாம் முத்தி
சித்தசெய மாத்திரமே துன்ப நீக்கஞ்
சித்தசெய மாத்திரமே சிறந்த வின்பம்.

ஓம் தத் ஸத்.

ஸத்யானந்தஃ

---

**Seleotion.**

## A GLANCE AT SRI KRISHNA.

## ஸ்ரீகிருஷ்ணப்பிரபாவம்.

"மாணிக்கத் தோற்றமும் ஜோதி ப்ரவாஹமும்." *

(முன்தொடர்ச்சி.)

ஒருநாள் மாலை சூரியன் தன் கிரணங்க ளாகிற குடையை மடித்து தான் வந்த வேலை தீர்ந்ததேயென்று மெள்ள வீட்டிற்குச் செல்வான் போன்று குடகடல் மூழ்கி மறைந்தனன்! ரஸிக சிகாமணிகளுடைய மனதை ரமிக்கச் செய்யும் சந்திரனும் அனைவர்க்கும் வந்தனை செய்து நடன வரங்கத்தில் தோன்றுவது போல் வான முகட்டில் புறப்பட்டனன். அன்றோ அவன் மறைந்தும் குறைந்தும் மழுங்கிக் கிடக்கவில்லை. பூரண வடிவமும் பூரண ஒளியும் பெற்று, மேகமாகிற பாவிகளால் மாசுபடாது அதிசுந்தரமாய் வெகு கம்பீரமாய்த் தோன்றினன். தன் அரசாட்சிக் குறிப்பாகிய வெண்கொற்றக் குடைக்குள் மனமோகன சர்வாலங்கிருதர்கள் அனைவரும் சுகசந்தோஷத்துடன் விளங்கலா மென்று தன்னுடைய கருணையாகிய கிரணங்களால் முரசறைந்த

---

* ஸ்ரீ கிருஷ்ணசைதன்ய சரித்திரம் எழுதிய தி. பக்தவத்ஸலம் பிள்ளை யவர்கள் இயற்றிய பாயிரத்திலிருந்தெடுக்கப்பட்டது.

னன். பழுதற்ற அழகுடைய பாவையர்களும் பார்த்தாக்களுமாய்க் களிப்புற்றோர்க்கு, திருஷ்டி சுழற்றுவது போன்று ஆகாயவாணியின் அருமைக் காத்திலேந்திய பொன்வட்ட மின்னிலவே இன்னவகை நன்னய முற்றது என்று ஒவ்வொருவரும் மகிழும்படி யிருந்தது. பால்போல் நிலாக்காய்வதால் மல்லிகை முல்லை யாதி மலர்களும் தடங்களும் எல்லா இடங்களும் வெகு சோபிதமாய் விளங்கிற்று. இந்த சுந்தர சந்தர்ப்பத்தில், நந்தபாலன் குழலெடுத்து நன்றாய் இசைபாடினன்! இதைக் கேட்ட கோபியரனைவரும் உற்றாரையும், பெற்றோரையும் பர்த்தாவையும் துறந்து எல்லாவற்றையும் மறந்து, குழலோசை வழியேசென்று கோவிந்தனிடம் அடைந்தனர். இரும்பை இழுக்கும் காந்தமும் சுரும்பை யிழுக்கும் மலருமோ அவன்! இப்படியோடும் கோபியர்களிலொருவர் இருவரை, ஓடாது தடுக்கத் தூணில் பிணித்துச் துயருருத்தியக்கால், அவர்கள் உடலம் அங்கிருந்ததே யன்றி ஆத்துமா ஐயனிடமே நாடிற்று! இதென்ன அபார நேசம்; ஒப்புயர்வற்ற உளமகிழ்வு; களங்க நீக்கிய காதற் கடல்!

கிருஷ்ணன்: "நீவிர் யாவர்? கண்மணிகளாகும் பெண்மணிகாள்! இரவில் நீவிர் உறவின ரின்றி ஏனோ இங்கு நானாவிதமாய் அலைகின்றீர்?

கோபிகள்: "கீதம் கேட்டுப் போதம் பெற்று நாதனிடம் வந்தால்—" கிருஷ்ணன்: நன்று! நன்று அடாத வார்த்தை விடாது 'பேசுகின்றீரே! நாலுபேர் கண்டு நகையாரர்களா? அழியாத பழிக்கும் அடங்காத பசைக்கும் ஒழியாத நகரத்திற்கும் உறுதி தேடிக் கொள்ளுகிறீர்களே! இது உமக்குச் சரியன்று! சொன்னேன்! சொன்னேன்! முக்காலும் சொன்னேன்! கொண்ட கணவனை விண்டு வந்தால் எண்டிசையும் ஈனம் புரியுமே! அது பெரிய அதர்மமாகும்! சாஸ்திரத்திற்கும் சர்வ விரோதம்! சங்கடம் வரும்! வீடு போய்ச் சேருங்கள்.

கோபிகள்: கிருஷ்ணா! நீ யிவ்வாறு சொல்வது சரியன்று: ஏழைகள் மனதைப் பாழ்படுத்தி இப்போது ஆழ்ந்த யோசனை கூறுகிறாயே! உனக்கிது தர்மமன்று. எமக்கு இன்பந் தந்து துன்பங் கூறும் அன்பா கேள்! மனதைக் கவர்ந்து மாயம் விளைக்கும் மன்னா கேள்: உற்றார் பெற்றார் என்று உளறுகின்றனை! உற்றார்யாவர்? பெற்றார்யாவர்? கணவன் என்று கதறுகின்றனை! கணவன் யாவன்? மனைவி யாவள்? இஃதெல்லாம் வெறும் பேச்சு! உலகத்துக் கெல்லாம் அலகற்ற முதல்வனாய் திலதம் போன்ற உன்னைப் பெற்ற யாம் உன்னுடைய அதிரேகமாயையான தோற்றங்களிடம் ஏற்றங்கூற மனஞ்சகியோம். உன் மகிமையாகிற ஜோதிப்ரவாஹம் எங்கெங்கும் விளங்கும்போது, அடுப்புத்தீயும் விளக்கினொளியும் தனித்துக்காட்டுமோ? கடலின் பெருக்கால் காசினியெங்கணும் நீர்மய மாகும்போது, கிணற்றுத் தண்ணீரும் குடத்து வெந்நீரும் கிளர்த்து நிற்குமோ! நன்று, நன்று, நீ கூறிய மாற்றம்! உள்ள புருஷன் ஒருவனே யாதலால், உன்னைப் புருஷோத்தம னென்று, உலக மெங்கும் பிரபலமாய் அழைக்கிறார்கள்! உன்னைத்தவிர மற்றையோ ரெல்லாரும் ஸ்திரீகளே! மாயாப் பிரபஞ்சத்தில் கணவனாய்த் தோன்றுவோருக்கும், உண்மைக்கணவன் நீ யாகலின், உன்னை யடுத்த கன்னியர்க்கு ஊனம் எவ்வகை நேரும்?

கிருஷ்ணன்: 'உலகத்தோ டொத்துவாழ்' என்னும் பழமொழிக் கிணங்க, மெய்யே யாயினும் பொய்யே யாயினும், நடந்து கொள்வ தல்லவோ நல்லவர்க் கடையாளம்? அதைவிட்டு நால்வர் நகைக்கத் தக்க வழிகளிற் பிரவேசித்து, கெட்ட பேரும் அபகீர்த்தியும் ஆஸ்தியாகச் சம்பாதித்து தட்டுக் கெட்டுத் தடுமாறி போவதேன்?

கோபிகள்: நேயம் விளைத்து மாயஞ்செய்யும் நியாகேள்! ஆசையாகிற பாசத்தால் அனைவரையும் கட்டிப் பின்னர் மோசஞ் செய்து நாசம் விளைக்கும் நேசாகேள்! நாங்கள் ஏழைப்பெண்கள்! மோழைத்தனத்தில் முதன்மையானவர்கள்! எதையும் மறந்தோம், அனைத்தையும் துறந்தோம்! உன்னிடமே மனது லயித்தது! எம் கண்ணுக்கு எங்கு பார்க்கினும் கண்ணனாய்க் காண்கின்ற தன்றி, வேற்றுப் பொருளின் தோற்றமே கிடைக்கவில்லை! உன் முகத்தைப் பழித்த முறுவலில் பக்திரசத்தைப் பொருத்தினோம்; உன் கண்ணகத்தில் எம் எண்ணமெல்லாம் குடிகொண்டது; உன் பரந்த நெற்றியில் எமது விரிந்த அறிவும் அடங்கி விட்டது; உன் சுந்தரத்தில் எமது தோத்திர மந்திரங்கள், நேத்திரோத்ஸவமா

ய்த் தந்திரத்துடன் தங்கி விட்டன! உன்னைவிட்டு யாம் பிரியோம்! நீயே எமக்கு மோக்ஷவீடு! உன்னோடு நரகத்திலிருந்தாலும் இருப்போமே யன்றி, நீ யில்லாத மோக்ஷம் நீக்குச்சமானம்தான்! எதுவரினும் வரட்டும்; உன்னையாம் விடோம். எமக்கு மானமும் இல்லை, அவமானமும் இல்லை; புகழ்ச்சியும் தோன்றுதி, இகழ்ச்சியும் தோன்றுது; நல்லது மில்லை, பொல்லாதது மில்லை; உன்னைவிட்டு நீங்குதலினும் வேறாகிய துன்பமும் கிடையாது; உன்னுடன் ஒத்திருத்தலினும் பிறிதாகிய சுகமுங்கிடையாது. ஆதலால் எம்மிடம் நீ வஞ்சம் விளைக்கின் உண்மையில் உயிர் விடுவோம். ஹா! சுந்தரரூபா! சுயம் பிரகாசா! எம்மைக் கட்டியணைத்துக் கடைத்தேற்றுவது உனதுகடன்.

கிருஷ்ணன்: ஏ! புனித சித்தங்கொண்ட வனிதா ரத்நங்காள்! ரதியைப் பழித்த அதிமோகனமும், கலாமதி யென்ன நிலாப்பெறு வதனமும், உங்கள் சித்த சுத்தியும், உத்தம பக்தியும் மெத்த வியந்தேன்! நான் இனி உங்கட்கு அடிமை! "பத்துடை யடியவர்க் கெளியவன் பிறர்களுக்கரிய வித்தகன்" என்று உங்கள் கருணையாலேயே, ஒரு தன்னியர் என்னைப் பாடப்பெற்றேன்! என் உடல் பொருளாவியும் உமக்கே தந்தேன், மனமகிழ்ந்தேன், அகங்குளிர்ந்தேன், அல்லல் களைந்தேன், இன்று நல்ல நாளாய் விட்டது! இன்று யான் பெற்ற பாக்கியம் போலும் என்பால் உற்ற அன்பினர் போலும் என்றுங் கிடையார்.

இவ்வாறு ஒவ்வொருவரும் அத்யந்த ஆனந்தானுபவத்தில் அழுந்தி, சிரமம் நீங்கிய பரமபதத்தின் நித்யர்களும் முக்தர்களும் அத்தனோடு இத்தலத்தில் உற்றனரோ என்னும்படி பரந்தாமனும் பக்தர்களும், பூவும் மணமும் போன்றும், ஊசியும் சரடும் போன்றும் பிருந்தாவனத்தில் உல்லாசமாய் உலாவிக் கொண்டிருந்தனர்.

சிறிது நாளாயிற்று! கோபியர் மனதில் கொஞ்சம் அகந்தை விளைந்தது. 'கண்ணபிரானே நமக்குக் கண்ணுளனுக, மண்ணுலகில் யாவரே நாம் மதிக்கற்பாலர்! எவரும் நமக்குச் சமமில்லை' என்று பலவாறு அவர்கள் தம்மைப் புகழ்ந்தும் பிறரை யிகழ்ந்தும் நடக்க நேர்ந்தது * * நேயம் புரிந்த மாயவன் ஓர் நாள் தேய மெங்குங் காணாது மாயமாய் மறைந்தான். இதனால் அம் மாதர்கள் தம் அறிவு கைவரப்பெற்று, அவர்கள் உயிர் ஊசலாடத் தொடங்கிற்று. உள்ளம் பதைத்தது, உடலம் துடித்தது, எங்கெங்கும் நங்கைக ளனைவோரும் நாயகனைத் தேடிக்காணாது, நடுக்கம் பூண்டனர். அவ்வேளை கோபியர் கொண்ட குறையையும் அடைந்த மனவருத்தத்தையும் கூற யாராலும் முடியாது. "மயிலே! மாயவனைக் கண்டாயோ?" என்பர். "குயிலே! கோபாலன் குழலிசையைக் கேட்டாயோ?" என்பர்; "மரமே! எம் மன்னவன் சேதி சொல்லாயோ?" என்பர்; கிருஷ்ணன் மீது கொண்ட காதற் பெருக்கத்தால், அவனைப் போன்றே அவர்கள் நடித்துக் காட்டுவர். இவ்வாறு பலவிதமாய்ப் பித்துப் பிடித்தும் புத்தி நீங்கியும் சொல் குழறியும் உடல் மெலிந்தும் கோபியர்கள் வருந்திக்கொண்டிருக்கும் சமயத்தில், முன்னினும் பதின் மடங்கு சுந்தரமாய் இன்பம் விளைக்கும் இசையூதி,கொஞ்சிக் குலாவிக் கோபாலன் வந்து சேர்ந்தான். கைப்பொருளை யிழந்தோர் மீண்டும் அதைக் கண்டதுபோல் ஆனந்தக்கடல் மூழ்கி அளவு கடந்த புளகமெய்தி அம்புஜாக்ஷிகள் யாவரும் நம்பனைக் கட்டி யணைந்து விடமாட்டோம் என்றனர். "கிருஷ்ணா, நீ யிவ்வாறு ஏழைகளாகிய எங்களைக் கைவிடல் தருமமோ? உனக்காகவே, உன்னை நேசித்த எங்களுக்கு ஒருபோதும் ஊனம் விளைக்காய் என்றல்லவோ நம்பியிருந்தோம்" என்று கோபிகள் கெஞ்சிக் கேட்க, "எனக்காகவே, என்னை நேசித்த எவர்க்கும் நான் இடையூறு புரிவதே யில்லை! சிலகாலம் என்னைப் பிரிந் திருந்ததினாலே, உங்களுடைய பத்தியும் ப்ரேமையும் முற்றிலும் உத்தம மடையவில்லையா?! காதலர் பிரிந்தால் ஆதரம் அதிகமாகும் என்பதே நீவிர் கேட்டதில்லையா?" என்று பகவான் பதில்கூறி அவர்களை மகிழ்வித்தனர்.

இஃதன்றியும், ஒவ்வொரு கோபிஸ்த்ரீக்கும் ஒவ்வொரு கோபாலனாக ஸ்வாமிகள் பிரசன்னமாகி, அனைவரும் மண்டலாகாரமாய் நிற்க, இடையிடையில், மின்னற்கொடிகள் பக்கத்தில் நீருண்ட மேகம் நிலைத்துக் மாண்பதுபோல், தாமும் விளங்கி ராஸக்கிரீடை யியற்றி யருளினர். இந்த ராஸக்கிரீடை ஜல

க்கிரீடை முதலியவைகளால், கோபி ஜனங்களுடைய மனங்குளிர்ந்து, பரம பக்த சிகாமணிகளாய் பிரகாசித்தனர். ஸ்ரீகிருஷ்ணனும் ஒவ்வொரு கோபிகா ஸ்திரீயினிடமும் எக்காலத்தும் தனித்தனியிருந்து, அவர்கள் ஒவ்வொருவருக்கும் பிரியமாகும்படி சம்பாஷித்துக் கொண்டிருப்பார். சங்கீதத்தில் பிரியமுடையவளிடம், சங்கீதம் பாடிக்கொண்டும், தத்துவ விஷயத்தில் ஊற்ற முடையவளோடு தத்துவங்கள் பேசிக்கொண்டும், இப்படி பலவிதமாய் பகவான் தோன்றும் அற்புத மகாத்மியத்தை வியந்து மண்ணவரும் விண்ணவரும் பக்தி மிகுந்து பரவசமாகினர்.

III

ஹிம்சை செய்ய எண்ணியிருந்த கம்ஸனுக்கு, கடைசியாக, கண்ணனே தனக்கு நண்ணிய விரோதியென்று புலப்பட்டது. இதனால் அவன் மல்ல யுத்த விளையாட்டு என்று ஒரு சிலம்பம் ஏற்படுத்தி ஸ்ரீகிருஷ்ணனை வரவழைத்தனன். ஸ்ரீகிருஷ்ணன் அங்கு வந்த போர்வீரனைவரையும் தொம்சம் செய்து, கம்சனையும் சம்ஹாரம் புரிந்து, உக்ர சேனனை அரசனாக நியமித்தனன். என்றாலும், எல்லா அதிகாரங்களையும் பகவான் தம்மிடமே வைத்துக் கொண்டனர்.

பிருந்தாவனத்தை விட்டுப் பெருமானார், மதுரா புரிக்குச் சென்றதும், பிருந்தாவனத்தில் ஒவ்வொருவரும் அடங்கா விசனம் பூண்டார்கள். அங்கே எங்கு பார்த்தாலும் துக்கக் குறிப்பாகவே யிருந்தது. ஏனென்றால் அவ்விடத்தில் கண்ணபிரானை ஒவ்வொருவரும் கண்ணுக்குக் கண்ணாய் நேசித்தனர். இவர்களுக்குள் ராதா துக்க சமுத்திரத்தில் மூழ்கி, பிராணன் போகும் நிலைமை யடைந்தனள். கண்ணன் மீது உண்மையாய்க் காதல் கொண்டோர், இவளைப்போலொருவரு மிலரென்று காசினி யெங்கும் முழக்கமாகியது. பகவானைச் சாஸ்திர வழியாய் உபாசித்து, பக்தி மாத்திரம் போதாதென்று பிருந்தா வனத்தோரை மனதில் இகழ்ந்து கொண்டிருந்த உத்தவரென்பவரை ஸ்வாமிகள் தமது க்ஷேம சமாசாரம் சொல்லி வரும்படி பிருந்தைக்கு அனுப்பினர். அவர் பிருந்தாவனம் வந்து பார்த்ததும் கிருஷ்ணன் பிரிவாற்றாமையால், விளைந்துள்ள கோலாகலத்தைக் கண்டு, அவர்கள் பக்தியை வியந்து, இதனாலன்றோ ஸ்ரீகிருஷ்ணன் இவர்களுக்கு வசமாயினர் என்று தம் மெண்ணத்தை மாற்றி, ஸ்ரீராதையின் பாத கமலங்களில் விழுந்து நமஸ்கரித்தனர்.

கண்ணபிரான் இப்பொழுது மதுராபுரியில் மன்னவராய் விளங்கிக் கொண்டிருக்கிறார்! எல்லோரும் அவருக்கு மரியாதை செய்யினும் அதுவெளிவேடம் மாத்திரமாய் நின்றதால் அவர்க்கு மகிழ்ச்சி விளையவில்லை. ஏழைக ளாகிய பிருந்தாவனத்தோர் பக்தியே ஏற்ற முள்ளதாய் அவர்க்குத் தோன்றியது.

சிலநாள் பொறுத்து, கிருஷ்ண ப்ரேமை யாகிற தீ ராதாவைக் கொளுத்துதலால், ராதா உயிர்விடும் நிலைமையி லிருக்கிறாளென்று தோழி கிருஷ்ணனிடம் முறையிட, அவர் மனம் நொந்து உடனே உண்மை அன்பினளை உபசரிக்கப் புறப்பட்டனர். பிருந்தாவனம் வந்ததும், தாமிருக்கும் அரச அலங்காரத்துடன், கிருஷ்ணன் ராதாவுக்கு காட்சி கொடுக்க, ராதா, அவ்வுடையைக் கழற்றி யெறிந்து, முன்போலவே தன்னுளத்த நிலையினனாய் காதற் கண்ணனாய் விளங்கினா லொழிய, அவரைத் தான் ஏறிட்டுப் பாரேனென்று கூறினள். ஸ்வாமிகள் அவ்வாறே ராதாவின் அபீஷ்டத்தை நிறைவேற்றினர். ராதாவின் அபூர்வ நேசத்தின் மேன்மைக்கு அஞ்சிப் பெருமானார் அவள் காலில் விழுவதுமுண்டு என்று சொல்லப்பட்டிருக்கிறது.

மேற்கூறிய கதைச் சுருக்கத்தால் ஏற்படும் உண்மைகளைச் சின்னாட்களுக்கு முன்னர் நடாத்திக்காட்டினார், முக்கியமாய் ஸ்ரீசைதன்ய ஸ்வாமிகளாவார். கண்ணன் வழிபிடித்துக் காசினியிலவதரித்த கடவுள் தன்மையுடையோரைப் பற்றி வெகு சிறிது கூறி முடிப்பது அவசியமாயிருக்கின்றது. * * * புது மலர்களாக இவர்க ளவதரித்து வெகு மணம் வீசும் வண்ணம் பக்தி நெறிக்குச் சந்தி யளித்தது பரம ஸ்ரேஷ்ட மென்று பலராலும் கொண்டாடப் படுகிறது.

---

## REVIEW.

### "மதிகெட்டமனைவி." *

(முன் தொடர்ச்சி.)

வீட்டைத்துறந்து நாட்டைத்துறந்து, மானம் விட்டு, மரியாதைவிட்டு, காமந்தலைக்கேறி, காமத்தலைவனே யெல்லாமென்று நம்பி வந்தவள் அவன் மாயா புருஷன் நம்பத்தக்கவனல்லவென்று கண்டால் என் செய்வாள்? இப்படி மானங் கெட்டபின் இந்த உயிரை வைத்துக் கொண்டு என்ன செய்கிறது என்று தன்னுயிரைத்தானே மாய்த்துக் கொள்ளத் தீர்மானித்து ஆற்றையண்டி ஆருயிரைப் போக்கிக்கொள்ளச் சமயம் பார்த்து நின்றாள். அத்தருணத்தில் கருணாநிதியாகிய கடவுள் தன் குற்றங் கண்டு வருந்தினாரை தயாமிகுதியால் காப்பாற்றுவ துண்மை யென நிரூபிக்க வந்ததுபோல் ஜீவசித்தி அங்கு தோன்றி அவளைத் தன்னிருப் பிடத்துக் கழைத்துக் கொண்டு போய் அவளெண்ணத்தை மாற்றி, அவள் செய்த பாபம் பெரிதும் பொல்லாததுமாயினும் அதிலும் பெரிதான 'தற்கொலை' செய்து கொள்வதால் அதிலிருந்து தப்பிக் கொள்ளலாமென்று அவள் நினைத்தது பிசகென்று அவளுக்கு உள்ளத்தில் பட உபதேசித்து உண்மையுணரச் செய்து, தயா நிதியாம் அவள் கணவனிடம் அவளைத்தாமே கூட்டிக் கொண்டு போய்விட்டு, அவளுக்குப் புகலிடம் கொடுக்கவும், உலகத்தார்க்கொப்ப அவளை மேலுக்கு மட்டும் தன் மனைவிபோலவே பாராட்டி வரவும் ஏற்பாடு செய்து வந்தார். அவள் கணவன் தன் குழந்தையின் மேலுள்ள வாஞ்சையால், தன் மட்டில் விரக்திபூண்டு, தன் குழந்தையினிமித்தம் அவளை அவளுடையதாய் என்கிற காரணத்தால் கௌரவமாகவே நடத்திவர உடன்பட்டான். குழந்தைக்கு விவாகமானதும் அவள் உடனே அவன் வீட்டை விட்டு வெளியே போய்விடவேண்டியதென்று கண்டிப்பாய்ச் சொல்லி அப்படியே நடந்து வந்தான். காலமும் கழிந்தது, காமவெறி விட்டகலவும் கற்பகத்துக்குப் புத்தி தெளிந்தது. தன் புத்தி கெட்டதைப்பற்றி தானே தன்னை நொந்து கொண்டாள். தன் கணவன் மகிமையைக்கண்டு தினந் தினம் வியந்தாள். தன் குழந்தையின் மேலான புத்தியைக் கண்டு நம் வயிற்றி லுதித்த இக்குழந்தைக்கிருக்கும் புத்தி தனக்கில்லாமற் போயிற்றே யென்று மனமுருகினாள். தன்கணவன் தன்னை யடக்கி யாளாமல் தன் மனம்போனபடி விட்டுக்கொடுத்து "என்னென்பதற்குமுன் எண்ணெய் என்று முன் வந்து" என் செருக்கை வளர்த்து என்னைப்பாழாக்கினனே யென்று வருந்தினாள். மனைவியாக நாம் செய்ய வேண்டிய கடமையில் தவறிப்போய், இனி அந்தப் பாக்கியம் நமக்கில்லையென அதை யிழந்து விட்டாலும், தாயாராகச்செய்யவேண்டியகடமைக்குக்குறைவின்றிச் செய்யவேண்டுமென்று, தன் அன்பை யெல்லாம் தன் ஏகபுத்திரியிடம் வைத்து அவளைக் கண்ணை யிமைகாப்பதுபோல் காத்து வந்தாள். சத்தியம்பிறழாமல் உத்தமவழிபற்றி உண்மையாய் நடந்துகொண்டு வந்தாள். தன் கணவனுடைய மேலான குணங்களை மதிக்க தனக்குப் புத்தியில்லாமற்போக தன் குழந்தை தனக்கு அப்பாவைப்போல் யுத்தியும் புத்தியும் உழைப்பும் உண்மையுமுள்ள புருஷன் வேண்டுமென்று சொன்னதைக்கேட்டு உளம் பூரித்துத் தன் புத்திமட்டும் எங்கேயோ போயிற்றேயென்று உள்ளமுருக உடல் நெக்குவிட வருந்தி வருந்தி வாடினாள். இவ்வளவு வருந்தியும் தன் குணமாவது தனக்கும் தன் கணவனுக்கு முள்ள வித்யாசமாவது தன் குழந்தைக்குத் தெரியாதபடி வெகு ஜாக்கிரதையாக நடந்து கொண்டு வந்தாள். இவ்வளவு கேடும் விளைந்ததற்குக் காரணம் தான் தன் செருக்கு மிகுதியினால் தன் கணவனிடத்து உள்ளன்பு வையாமலும் அவனை மதியாமலும் இருந்ததே காரணமென்று கண்டு கொண்டாள். குணமில்லாப்பெண்டிர் கூத்தெனத் தருமென்று சொல்லும் உலகவழக்கு தன் விஷயத்தில் நிதர்சனமாயிற்றே யென்று வருந்தினாள்.

* * * *

இப்படி இரண்டு மூன்று வருஷங்கள் கழிந்தன. அப்பெண்ணின் அன்பில் தாயும் தகப்பனும் ஈடுபட்டிருந்தமையால் தங்களிருவருக்குமுள்ள வேற்றுமை கூட விளங்காதபடி அக்குழந்தையின் க்ஷேமத்தைத் தேடுவதிலேயே இருவரும் ஒருமனப்பட்டவர்களாயுழைத்து வந்தார்கள். இன்னுமக்குடும்பத்தில்

* "A Wife Condoned," by S. M. NATESA SASTRY, B. A., M. F. L. S.

எத்தனையோ சம்பவங்கள் நேரிடுகின்றன. எல்லாவற்றிலும் கற்பகம் "சத்தியமே கதி"யென்று சத்தியத்தைப் பற்றி நின்று தனக்குப் பின்கதி யெப்படி நேரிட்டாலும் தற்காலம் சத்தியத்திற்கிணங்கி சத்தியவழி நடப்பதேதனக்குத் தகுந்ததும் ஒத்ததுமாயுள்ளதென்று தாயன்பு பெருகி, தன் கற்பையிழந்ததற்காக உள்ளமுருக உருக மனம்வருந்தி தனக்கு எவ்வளவு வருத்தமிருந்தாலும் அதைத் தன் குழந்தைக்குக் காட்டக்கூடா தென்று பெருந்தன்மையாக நடந்து கொண்டாள். "உள்ள முருக உருகக் கள்ளம் கருகக் கருக" வென்று சொல்லும் மூத்தோர் வாக்குப்படி அவள் உள்ளம் கரைந்துருகவுருக அவள் கள்ளமும் கரைந்து போய்விட்டது. ஜீவசித்தி கடைசியில் இவளைப் பார்த்த பொழுது அவள் கள்ளம் கரைந்ததை அவள் முகக்களையாலுணர்ந்து அவள் தன் குழந்தையின் கலியாணத்திற்குப்பின் தான் அதோகதியாகப் போகவேண்டுமே" இப்படிப்பட்ட சத்புருஷரை மாலையிட்டும் அவருக்குச் சொல்லிமுடியாத தீங்கிழைத்த பாவியானேனே! யென்று வருந்தின போதெல்லாம், "அன்பின் சக்தி அபாரமானது: உன்னைக் காக்கவென்றே அன்புருவாயவதரித்த குழந்தை யதோவருகிறாள் பார்" என்று சொல்லித் தைரியம் கூறினார். அப்படியே அக்குழந்தையின் விவாககாலம் கிட்டி முகூர்த்தம் நெருங்கவும், அக்குழந்தை அம்மாள் சங்கடப்படுகிறாளென்று தானும் சங்கடப்பட, அதையறிந்த அவள் தகப்பனார் அச்சங்கடம் பொறுக்க முடியாது அக்குழந்தையினிமித்தம் அவள் தாயை "இனி அழவேண்டாமென்று அப்பா சொன்னார் என்று சொல்லு, அவள் அழமாட்டாள்" என்று சொல்லித் தேற்ற வேண்டி நேரிட்டது. அப்படித் தேற்றினதில் அவருக்கு மனவருத்த மொன்று மில்லை. அக்குழந்தையின் அன்பாகிய பரிசவேதி தாயின் குற்றமுள்ள மனதையும், தகப்பன் சீற்றமுள்ள மனதையும் தொட்டு இரண்டையும் தன்மயமாக மாற்றிவிட்டது. குற்ற முள்ள விடத்தில் குற்ற மொழிந்தது. சீற்ற முள்ளவிடத்தில் சீற்ற மொழிந்தது. விகாரங்களற்ற மனது தன்மயமாய் ஸ்வயம்பிரகாசமாய் விளங்கும் அன்பின் ஒளிபட்டு அன்புருவாக மாறியது. எல்லாம் அன்புமயமாக மாறினவிடத்தில் துன்பம் எங்கே யிருக்கும்? ஆகையால் அது எடுத்தது ஓட்டம்!

"இவ்வுலகில் எவனும் எக்குற்றத்தைச் செய்தாலும் முதல் முதல் தெரியாத்தனத்தால் செய்த குற்றமாயிருந்தால் அதையவன் சீர்திருத்திக் கொள்ள முடியா தென்பதில்லை. சீர்திருத்திக்கொள்ளும் வகை அவனிடத்தே சித்தமாக விருக்கின்றது. உன்னிடமிருக்கும் தாயென்ற தர்மம் உன்னிடம் முதலில்லாமலிருந்த மனைவியின் தர்மத்தை உனக்குத்திரும்பக் கொடுத்தது" என்று இக்கதா நாயகர் கற்பிழந்த தன்மனைவியை மன்னித்தேற்றுக்கொண்டபொழுது சொன்னவார்த்தை உண்மையில் "பாபமன்னிப்பு" என்னும் மேலான உள்மதக் கொள்கையை யுணர்த்தும் உத்தம வாக்கென்று எல்லாரும் ஒப்புக்கொள்வார்கள். மதிகெட்ட மனைவியே பாபாத்மாக்களாகிய சீவன்கள். அவள் கணவனும் 'பயோநிதியே' கருணாநிதியாம் **கடவுள்**. அவனைக் கெடுத்த பாதகனே **மாயை**. அவர்கள் குழந்தையே **அன்பு**. ஜீவசித்தியே **தர்மாவதார** மூர்த்தியாகிய வேதாந்த சித்தாந்த சமரச சாந்தக்களஞ்சியம், ஓம் தத் ஸத்.

சாந்தசர்மா.

---

## சுகுணசுந்தரம். IX

---

ஏதோ உரத்த பேச்சுக் கேட்கின்றதே, அஃதென்னையோ?' என்றொருவன் கேட்க, மற்றவன் 'தோழ! நம்தந்தையர், நம்முடைய கல்யாணத்திற்கு முதன்மையாகச் செய்யவேண்டிய சாந்திகளைச் செய்துமுடித்து, அந்தணர்கட்குப் பல்வகைத் தான தருமங்களைச்செய்தும் ஏராளமான பொருள்களைத் தாராளமாய் வாரிவாரிப் பூரி கொடுத்தும் வந்தனராம் என்று சொல்லிக்கொண்டிருக்கையிலேயே, அவன் "தோழ! விதிப்படி செய்யவேண்டிய கருமங்களைத் தானே செய்தனர் பூபதி. அதற்கேன் இந்த இரைச்சல்?" "சுகுண! சுலோசனையைக் கவர்ந்து செல்ல யாவரேனும் எத்தனித்தனரோ? இதோ சென்று போர் தொடுத்து அக்கொடியோனை இச்சக்தியால் கொல்லுகின்றேன். பார்!" என வீராவேசங்கொண்டெழ,சுகுணன், 'அன்ப! அவ்வாறு எவனுந்து

ணிந்தானில்: திக்விஜயகாலத்தில் நம்முடைய பராக்கிரமத்தைக்கண்டும் |கேட்டும் எவன் நம்மை எதிர்த்துப்போர் புரியவருவன்? சாருதத்த மகாராஜன், சுவயம்வரத்துக்கென வந்திருக்கும் இராஜமைந்தர்களை நோக்கி நந்தவனத்தில் நேற்று நிகழ்ந்தவற்றை விண்ணப்பஞ்செய்து கொள்ளலும், கிருபாகடாக்ஷ முனிவர் அவர்களை நோக்கி சம்பகாவதியின் சரித்திரத்தைச் சாட்சியாகக்கொண்டு, கடவுளை முன்னிட்டு உன்னை, சுலோசனை மணம் புரிய விருக்கின்றாள் என்று பகிரங்கமாய்ச்சொன்ன மாத்திரத்தில் எல்லா இராஜகுமாரர்களும் எங்குந் திகைத்து, சுலோசனை நமக்குக் கிடைக்கமாட்டாள் என்று தமக்குள்ளே நிச்சயித்துக்கொண்டு மௌடனீபூதர்களாக தலைகுனிந்த வண்ணமன்றோ இருந்தனர்? நீ கொண்டவாறு போர்புரிய எவனும் நினைத்தானில்லை. நான் சொல்வதைச் சற்று சாவதானமாய்க்கேள்— அப்பொழுது ஓர் அந்தணர், சக்கிரவர்த்தியாம், உன் பிதா சுசீலரிடம்வந்து, 'நீவீர் நன்கொடையாளர் என்னும் பிருதுடன் பல்வகைத் தான தருமங்களை இச்சுபகாலத்திலியற்றுவது தெரிந்து யான்வந்திருக்கின்றேன்;' என, 'மகாராஜா அவரை வணங்கி, 'அந்தணச்சிரேஷ்ட! நும் கருத்தின்படி யான் நடக்கமாட்டுவேன். அதை இக்கணமே அடியேன் அறிய விருப்பமுற்றுளேன்.' என்றும், அந்தணர், 'ஏ, ராஜ! நீவிர் என் மனப்படி நன் கொடையளிக்க வல்லவர் அல்லீர்.' என்று நன்மொழி கூறலும், அரசன் (தனக்குள்) 'இவர் ஈசுவரசிருஷ்டியில் அடங்கிய பொருள்களையன்றி வேறுயாது கேட்கப்போகின்றனர்? சிருஷ்டி வர்க்கங்களுள் எப்பொருளையும் கொணர்ந்து கொடுக்கவல்லேமன்றோ? இம்முனிவரரைக்களிக்கச் செய்யாத நன்கொடைகளா லாயபயன்தான் என்னே?' என்றுசிந்தித்து, 'பிரபோ' முனிவர! நும் கருத்துத்தான்யாதோ? விளக்குவீர்,' என அவர்: "ராஜ! நம் கருத்தை விளக்கிய பின்னர், அதை யளிக்கமாட்டுவேனில்லன் என்ற விடைவருமோ வென்றே அஞ்சாநிற்கின்றேன். எம்மனக்கோரிக்கை யாதாயினும் அதை யளித்தலே சத்தியம் என்பீரேல், யாம் பகருவேம், என்றவுடன், இராஜன் சற்றும் தயங்காது, 'விப்ரோத்தம! நும்மன்க் கோரிக்கை யாதரமாயினும் அதை இக்கணமே நமக்களித்தலே சத்தியம், சத்தியம், சத்தியம் என்று மும்முறை கூறலும், அட, ராஜ! உனது மொழிபொய்க்காமல், உன் அருந்தவப் புத்திரனும், சுந்தரரூபனும், சுகுணசீலனும், சுந்தர இளவலது சிரத்தை இதோ இருக்கிற உன் மனைவியும் நீயுஞ் சேர்ந்து மனமகிழ்ச்சியுடன் ஓர் வாளினால் கொய்து, எமக்கு மனப்பூர்த்தியாய், கண்ணீர் சிந்தாதளிப் பையேல் உன்மொழி உஜ்ஜீவித்தல் ஆகும். என்ன சொல்லுகின்றனை? சீக்கிரம், சீக்கிரம்," என்று கடிந்துரைத்தலும், நும் பிதா மூர்ச்சித்தனர்.' என்றான் சுகுணன். உடனே சுந்தரன், 'மித்ர! நான் தன்யனாயினேன். இப்பிறப்பினாலாய பயனை யானடையப் பெற்றேன்; தந்தையாரின் மொழியை சத்திய மொழியாக்குவேன்- வா, செல்வோம், நம் தந்தையர் பக்கல்.'

சுகுணன்:—'மித்ர! என் சிரத்தைக் கொய்து விப்ரருக்குத் தானஞ்செய்து, மித்ரபாவம் இத்தன்மைத் தென உலகினருக்கு விளக்கிக்காட்ட சுமந்திரராம் என் தந்தையர் முயலுவதாகவும் வதந்தி. அத்தகைய கீர்த்தியை என் பிதாவகிக்குமாறு நானேயென் சிரத்தைத் தந்து இச்சன்ம சாபல்யமாகும்வழியைத் தேடா நிற்கின்றேன்.'

சுந்தரன்:—விப்ரர்தம் மெண்ண மவ்வாறன்றேல்?'

சுகுணன்:—'அவருக்கு வேண்டுவது சிரமேயன்றோ?'

சுந்தரன்:—'சுகுண! அந்தணர் என் சிரத்தையன்றி மற்றொன்றையுங் கொள்ள விருப்பமுறார் எனத் தோற்றுகின்றது. சற்றுமுன் நீ மொழிந்தது மஃதேயன்றோ?'

சுகுணன்:—'சுந்தர! அங்ஙனம் நிகழுமேல் யான் உயிர் துறக்க நேரிடும், திண்ணம், திண்ணம்.'

சுந்தரன்:—'தோ! படாதபாடும் பட்டுக் கொணர்ந்த சம்பகத்தின் கதிதான் என்னையோ?'

சுகுணன்:—'சுந்தரானந்த! தன்னருந்தவப் பேற்றால் நின்னைக்காணலும் மெய்மறந்து உன்னைக் கெட்டியாய்க் கட்டிக்கொண்டு அணைவதெக்காலமோ? என்று பெருமூச்சு விட்டனளே, அந்த சுலோசனையம்மை என் செய்கிற்பாள்?'

சுந்தரன்:—'இறைவன் அருள் யாதோ! வா, போவோம், நம் தந்தையர் பக்கல்' என்று சுகுண சுந்தரரிருவரும் போந்தனர்.

டி. எஸ். சுப்பராமையர்.

## To Our Subscribers.

**Some of our subscribers are still in arrears for Vol. X. These and others will please remit their arrears for Vols. X and XI at once with their advance for the current volume or receive the next number by V. P. P. for the arrears due.**

### நமது சந்தாதாரர்களுக்கு.

நமது சந்தாதாரர்களிற்சிலர் இன்னும் 10-வது வாலியத்துக்குரிய சந்தாவைச்செலுத்தவில்லை. இவர்களும் மற்றவர்களும் 10, 11-வது வருஷப்புத்தகங்களுக்குரிய சந்தாவையும் 12-வது வாலியத்துக்குள்ள சந்தாவையும் உடனே அனுப்பல்வேண்டும். அல்லது அடுத்த சஞ்சிகையை பாக்கி யுள்ள சந்தாதொகைக்கு V. P. P. மூலமாக அனுப்புவதைப் பெற்றுக்கொள்ளல் வேண்டும்.

**D. K. Agency.**

20th *May*, 1903. தி. ப. ஏஜன்ஸி.

# "ANANDA MISSION"

## For the Propogation of Truth and Knowledge.

**As the Way to Health, Happiness and Life, Through Self-Help, Self-Control and Self-Culture.**

***"EKAM SATYAM BRAHMA."—SRUTIVAK.***

" Seek Truth wherever you can find it,"
" But Make your Choice and Stick to it "
till you reach the end.

" *Truth is hard Finding !*" **Yes,** " *Uncompromising too* **when** *whole*; **Yet Try !** " *Awake, Arise and Stop not till you reach the Goal.*"—*Sruti.*

'And Ye shall Know the Truth and the Truth shall make you Free"—Christ.

All persons who love Truth for its own sake and are willing to show good-will towards All, regardless of race, creed, religion, caste or color, will be eligible to become members, helpers or sympathisers of the Mission as it may suit their intelligence, development and selfless state

Sincerity in thought, word and deed, an essential and unfailing condition to be scrupulously fulfilled by all

***Satyameva Jayati.***

## Hail! Ananda Natesa!

*Sri Akandananda Satguruve Namaha.*

## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy 7½ As. : Back Nos. 8 As. each.

**English & Foreign Subscription 7s. 6d. net per annum.**

**Thin Paper Edition** for the People :—

**Subscrn. Price : Yearly Rs. 4; Half-yearly Rs. 2-2.**

**Single copy, current No. 5½ As.; Back Nos. 6 As. Each.**

**English & Foreign Subscription 5s 6d. net per annum.**

**If strictly Prepaid** at the commencement of the term, (*i.e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As, off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year Enrolled Subscribers may not withdraw except at the end of the year

☞ To regular annual subscribers 2 months grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P. to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and avoid vexatious delay and needless correspondence.

### விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

**தளமான காகிதப்பதிப்பு:—** அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி 7½ அணு. பழைய பிரதி 8 அணு.

**லேசான காகிதப்பதிப்பு:—**சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.
தனிப்பிரதி 5½ அணு. பழைய பிரதி 6 அணு.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவறாமல் கட்டினால் வருஷசந்தாவில் 8 அணுவும், 6-மாச சந்தாவில் 4 அணுவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

எப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தா தாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்து கொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும் போதெல்லாம் அவர்கள் ரிஜ்ஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்கு வரவுக்கு மிடமிராது.

# TO EMERSON

**And through Him To All Ripened Souls in the East or West**

That having drunk to the dregs of the Bitter cup of Sorrow
With its passing shadows of pleasure and pain
Which this ever-changing fleeting World affords,
Are waiting breathlessly to hear the bugle call of Him that said:
"Come unto Me and I will give you Rest"
Which is but an Echo in Brief of that Same Voice that rang of yore
In this Ancient Vedic Land of Ind:
**"Awake! Arise! and stop not till the Goal is Reached'"**
This Gospel of the Holy Mother,
"The Word made Flesh,"
That came to dwell again in the East
And teach to the Hungering, Thirsting souls of the West
The **Motherhood** that exists in God,

**IS**

By Her Divine Grace and Command,
Most Reverently Dedicated
In All Love and Truth
By Her Blessed Child and Son.
Om Tat Sat.

# Truth Often Unwelcome At First.

THE time is racked with birthpangs: every hour
Brings forth some gasping truth, and truth new-born
Looks a misshapen and untimely growth
The terror of the house-hold and its shame
A monster coiling in its nurse's lap
That some would strangle, some would starve;
But still it breathes, and passed from hand to hand,
And suckled at a hundred half-clad breasts
Comes slowly to its stature and its form
Calms the rough ridges of its dragon scales,
Changes to shining locks its snaky hair,
And moves transfigured into Angel guise,
Welcomed by all that cursed its hour of birth
And folded in the same encircling arms
That cast it like a serpent from their home.

*Oliver Wendell Holmes.*

# DEDICATION.

**To That Great Soul** that born in the West, where Materialism rules, Now, *One Hundred* years ago, singly and *alone*, with whole heart and true, strove and strove, struggling and falling, yet rising again at every fall with renewed strength and added might to his brave white soul, pure as ethereal white (*Satva*) that from the Western Half of the World, standing alone and towering far above the highest peak on any mountain range, that from Mother Earth hath lifted up its head to the region of the clouds, "*did hitch his wagon to a star*" and letting it pull him up, lifted himself up from earth, above all mortal souls, and kissed the feet of Him that of yore as KRISHNA taught the Truth in songs celestial to ARJUN bold, His true disciple, friend and favourite *love*.

**To Emerson,** the Ideal Hero of my own true heart and living soul that by the light of truth I have learnt to love, honour and cherish, as if he were my own true and spotless Soul, that a hundred years ago was "made flesh" in the far far West; that from there it might absorb the *Light* of all lights that from Eternity shines million-orbed in the Great Orient; where the Children of God, living in the light of Truth in the Vedic Land of Ind, recognise neither caste nor color, nor race nor birth, nor high nor low, nor east nor west, nor good nor evil; but recognising only the two poles of Earth, the North and the South—Symbols divine in this created Earth of the Positive and Negative attitude of Mind to Truth, or, Soul to God,—declared in a resonant Voice, redounding, *still*, from Earth to Heaven and back and all the ages through unto Eternity, thus :—

"This body (so-called) is the temple of God (*Deho Devalaya*): The Life within is Siva pure (Creator and Lord): Remove the Ignorance or Darkness inherent in the soul and becoming pure (*Satvic*—pure-minded) and white as the untouched snow that from heaven falls direct on Himalaya's lofty peaks, worship thy own, true, unchanging Ideal-Self—the Soul in glory shining, the Image of Him that made thee after His Own. The Eye that looks on everything and all with undifferentiating spirit, and perceives, below all seeming differences, the great unifying principle of LOVE, *that*, my child, know thou to be *Wisdom true! THOU ART THAT! THOU ART THAT!—TATTVAMASI SVETAKETU!*"

**To Emerson** the Great Soul that was born in the West just one hundred years ago, Do *I* his kindred Soul that now *am* in the flesh and yet not of the flesh, nor of the earth, earthy, though on earth I live equally as in heaven, one step here and one step there and a third step I lift not My little God-Child foot, but to place it on the breast of him or her that takes me up as a Child of God and feeds me with the holy butter, which to me is nothing but the essence of Love —of that divine and perfect Love that comes by churning the milk of human kindness in that fragile vessel that so often breaks, only to be re-formed again—the Human heart.

**To Emerson** the Great Soul, this young soul just uplifted by the perfect Love and divine Grace of My Holy Mother, "the Word made flesh" that came to dwell again in the EAST to teach to the West, the Great Principle that in *Christ* it has failed to catch—the Motherhood that exists in God which "He" in truth and spirit worshipped as the Holy Ghost—**To Emerson,** the Ideal Hero, the Woshipper of Truth Absolute, as the highest and most perfect Ideal that human souls ought to strive for and attain: **To Emerson** such, this young soul, the Son of Truth and the Blessed Child of My Holy Mother Sri Akandananda (Infinite Bliss in formless undivided form), doeth its greetings send in all Love and Truth and dedicates itself to love and worship all that is Good in the West, as it has learnt to love, and adore the perfect Ideal that is so rich in the East.

AND to the Followers and true Worshippers of **Emerson,** his noble sons and daughters true that living in the far West,—in the Great World where "the Almighty Dollar" rules and holds undisputed sway, debasing and degrading its votaries, millionaires and billionaires though they be, to a depth, that my young uplifted Soul shudders to look:

To that Noble and Small Band of true workers that work honestly, earnestly and in good faith to *know* the Truth, which in reality means to *live the life of Truth*, do I extend my hand of fellowship in brotherly love and give them one and all heart to heart a good hand-clasp and loving embrace that shall touch their very soul and make their true hearts throb in response to that 'flesh and bone melting' love that melting riseth in the deep well of my great heart that

by contact with my divine Mother's holy breast hath grown and grown until it has broken all bounds and stands alone and yet embracing all in the Infinite chain of cause and effect, My Holy Mother's magic circle whose centre is everywhere and circumference nowhere!

THIS My Greeting I Send to my Brother beloved of Now in whom and through whom I see the lovely souls and pure hearts of manly men, and womanly women nobly planned to help, to advice, to comfort and be comforted, leaning on the strength of Man and yet deriving such strength from Him that She while mutely following him in love and silence treading the rugged paths of this world, deftly rules him by her great and charming *power* of LOVE in Woman's heart implanted first, by God's own Hand, that growing with her growth, made her bosom swell and swell and overflow with the milk of human kindness which in MOTHER LOVE is made manifest in Her. These I Worship and Truly adore; and amid the holy shrine of Her soft swelling breasts I bend me down and all my strength of manhood willingly abnegate that I purified and purged of all dross, once more might become "LIKE UNTO CHILDREN" and take my second-birth, that so re-born and becoming a *child* again, I may in secret *silence* dwelling, nestling *rest* amid the soft white Bosom (*satvic state*) and drink deep from the heavenly fountain of My Holy Mother's divine breast (of which all others are but part manifestations) the divine Milk of Wisdom and Truth Absolute. Amen!

So, To All Ye, Noble Maids and Matrons true, that in heart and in life endeavour to live up to the Great Ideal of True Womanhood (Wife and Mother combined—Passion and pure love in perfect and due proportion mingled to lift up the soul, by power of life's duties lovingly discharged, from earth to heaven.)—

To All Ye Fair Ones and Blooming Brides and tender self-sacrificing Mothers,—harbingers of heaven on earth—To Ye All *I* bow my head and worship You one and all in my own manly heart as so many incarnations, in diverse forms and varieties infinite, of Her from Heaven who coming down to Earth taught me the *Way* to live in this world the ideal life of an uplifted soul, guiding the tottering steps of my sense-bound soul as Sister, Wife, Daughter sweet, and Holy Mother divine, letting my soul grow untaught by any human art, in the free air and sunshine of Her Perfect Love.

THIS my fealty to your sex with a heavenly kiss on Thy Holy Womanhood's immortal breasts Do *I* seal and stamp it with the True Seal of Heaven that has deeply engraved on it, the Royal Sign-Manual of all released souls, which is:—"**OM TAT SAT**"—

And intoxicated with the sweetness of the Nectar-yielding holy breasts, I buzze about and sing like humming bees (Brahmaras) that hover round and round the centre of Lotus Blossoms,

OM! OM! OM!

Adorations to My Holy Mother's Lotus Feet.

OM TAT SAT.

---

THUS Ending, my young soul *rested* in contemplation on the lotus feet of the Divine Holy Mother, and slowly melting, mingled in that Infinite Ocean of Bliss, the All-Soul, realising in truth the saying of the Great One that of yore, in ineffable Bliss declared, "*Aham Brahmasmi.*" And emerging again from that *Union*—too sacred and mystic for human *kind* to sound—I heard a familiar *Voice* whisper in the still deep silence of my soul; and meditating over the mystic symbol, heard the self-same *Voice* develop into an utterance which, I found, was but an echo of the ringing response of that Great Soul that manifesting in the West, through Emerson declared:—

"When at last, that which we have always longed for, is arrived, and shines on us with glad rays out of that far celestial land, then to be coarse, then to be critical, and treat such a visitant with the gabber and suspicion of the streets argues a vulgarity that seems to shut the doors of heaven. This is confusion, this the right insanity, when the soul no longer knows its own, nor where its allegiance, its religion, are due. Is there any religion, but this, to know, that, wherever in the wide desert of being, the holy sentiment we cherish has opened into a flower, it blooms for me? if none sees it, I see it; I am aware, if I alone, of the greatness of the fact. Whilst it blooms, I will keep sabbath or holy time, and suspend my gloom, and my folly and jokes. Nature is indulged by the presence of this guest. There are many eyes that can detect and honour the prudent and household virtues; there are many that can discern Genius on his starry track, though the mob is incapable: but when that love which is all-suffering, all-abstaining, all-aspiring, which has vowed to itself, that it will be a wretch and also a fool in this world, sooner than soil its white hands by any compliances, comes into our streets and houses,—only the pure and aspiring can know its face, and the only compliment they can pay it, is to own it."—*Character.*

"The Spirit sports with time,—

"Can crowd eternity into an hour
Or stretch an hour to eternity."

"See how the deep divine thought reduces centuries and millenniums, and makes itself present through all ages."

"The soul knows only the soul; the web of events is the flowing robe in which she is clothed"—*The Over Soul.*